

ஓம் குமரகுருதாச குருப்யோ நம:

வேலை வணங்குவதே வேலை

# மகா மந்திரமகிமையும் குமாரஸ்தவமும் "குகஸ்ரீ இராமானுஜ சுவாமிகளும்"








தொகுத்தவர்

**பாம்பனடிமை A.S. சொக்கலிங்கம்**


(திருச்சியில் 1992 நடைபெற்ற விழாவின்போது குமாரஸ்தவமே சாட்சி என்ற மலர் வெளியிடப்பட்டது. அதனை தழுவி இந்நூல் வெளியிடப்படுகிறது என்பதை அறியவும்)



பாம்பன் ஸ்ரீமத் குமர குருதாச சுவாமிகள்

என்னை யாதரித்தருள் பரமசக்தி என்னை நம்பினாரை
ஆதரியாது நிற்குமோ ஐயம் வேண்டாம்
(பாம்பன் சுவாமிகள்)

உ

ஓம் குமரகுருதாச குருப்யோ நம:

வேலை வணங்குவதே வேலை

# மகா மந்திரமகிமையும் குமாரஸ்தவமும் "குகஸ்ரீ இராமானுஜ சுவாமிகளும்"





தொகுத்தவர்

**பாம்பனடிமை**

**A.S. சொக்கலிங்கம்**

(திருச்சியில் 1992 நடைபெற்ற விழாவின்போது குமாரஸ்தவமே சாட்சி என்ற மலர் வெளியிடப்பட்டது அதனை தழுவி இந்நூல் வெளியிடப் படுகிறது என்பதை அறியவும்)

குமரகுருதாச குருப்யோ நம:

## முகவுரை



உலகம் உய்ய உயர்நெறியில் செல்ல ஒவ்வொரு நூற்றாண்டிலும் மகான்கள் அவதாரம் செய்து வருகின்றனர். காலத்திற்கு ஏற்ப ஞானிகள் தோன்றி நம்மை வழி நடத்துகிறார்கள் சத்தியமான உண்மை.

அம்மரபில் நமது அப்பா, சிறியவர்கள் பெரியவர்கள் வரை எல்லாராலும் அழைப்பது அப்பா, அவர்தான் அப்பா குகஸ்ரீ இராமானுஜ சுவாமிகள். ஆன்மீக வழியில் நற்றுனை நல்கி நம்மையெல்லாம வழி நடத்தி வருகின்றார்கள் இதற்கு காரணம் அவர் அடிக்கடி சொல்வது நம் பெற்றோர்கள் செய்த தவப் பயனே நம்மை ஆன்மீக வழியில் அவரை அனுக வைத்துள்ளதே!

இம்மகா மந்திரத்திற்கு பத்தியம் என்னவென்றால் "முடிந்தால் நல்லதைசெய்யலாம் இல்லையென்றால் சும்மா இருந்தாலே நலமாகும்".

பண்ணிய புண்ணியங்கள் பலிக்க பாவங்கள் பட்டென விலக பாரில் எண்ணிய எண்ணங்கள் ஈடேற எங்களின் இதயம் என்றும் தூய்மைபெற வான் சிறக்கும் வான்மியூரில் உள்ள குமார பரமேஸ்வரனின் ஆறெழுத்தை ஓதி ஓதி அந்த மில்லாத ஆண்டவனாகிய ஆறுமுகனை ஆறுகாலமும் தொழுத குமருகுருதாசரின் வழியின் கிடைத்த குமாரஸ்தவத்தின் புகழ் போற்றி குமார பரமேஸ்வரனை வணங்கி அடியார்க்கு நல்லார் நம்அப்பா போல் நாமும் அடியவராகி நல்லதை செய்து நலம் உய்ய வேண்டிட விழைகிறேன் எல்லோரும் என்றும் எல்லாவற்றையும் பெறவும் எனைதள்ளினாலும் தள்ளே எனை நம்பிய வரை தள்ளேனுல் சுவாமியின் வாக்கு என்ற நல்மனத்துடன் வாழ்வில் வளம் பெறுவோம்.

இதற்கு மிகந்த துனையாக இருந்து இறைவனையை சேர்ந்தவர்கள் நாம் நினையாமலும் போற்றாமலும், வணங்காமலும் இருக்கலாமா அவர்களின் பதம் பணிவோம்.

1. தெய்வத்திரு திருப்புகழ்சதுரர் சே. த. இராமலிங்கம் பிள்ளை
2. தெய்வத்திரு ஸ்ரீலஸ்ரீ துர்க்கை சித்தர் சுவாமிகள் (படப்பை)
3. தெய்வத்திரு கொடைமுகில் இரா. விஷ்ணுதாசர் (திருச்சி)
4. தெய்வத்திரு P.T. இராகவன் சுவாமிகள் (சென்னை)
5. தெய்வத்திரு T.T. குப்புசாமி செட்டியார் (சென்னை)
6. தெய்வத்திரு Dr.M.S. சரவணன் (சென்னை)
7. தெய்வத்திரு செந்தாமரை கண்ணன் (சென்னை)
8. தெய்வத்திரு P.R. சந்திர பிரகாஷ் (சென்னை)
9. தெய்வத்திரு சண்முகம் சுவாமிகள் (சென்னை)

இவர்கள் யாவரும் நமது பாம்பன் ஸ்ரீமத் குமரகுருதாசரை நினைத்து அடியார்களாகி அடிமைகளாகி அப்பாவிடம் அன்பராகி இறைவனிடம் இறை அற கலந்து அருள்பாலிக்கிறார்கள். அத்தனை பேரின் நல்லாசியுடன் இந்நூல் வெளியிட கடமை பட்டிருக்கிறேன் என்பது சத்தியமான உண்மை அடியார்க்கும் அடியேன்

"பாம்பனடிமை"

**A.S. சொக்கலிங்கம்**

சென்னை–83

## திருப்புகழ்

கருபற்றி ஊறிப்பிறவாதே
கணக்க பாடுற்று உழலாதே
திருபொற்பாதத்து அனுபூதி
சிறக்க பாலித்து அருள்வாயே
பரப்பற்றரறுக்கு உரியோனே
பரத்தபாலுக்கு கணியோனே
திருக்கை சேவற் கொடியோனே
ஜெகத்தில் ஜோதிப் பொருமானே

உ

முருகன் துணை

# பகை கடிதல்

(இத்திருப்பதிகத்தைப் பற்றுணர்வோடு காலை, மாலை வேளைகளில் பாடுவார் முருகப்பெருமானை மயிலின் மீது காணும் போது பகையை வெல்லுவர். சண்முகக்கவசப் பாராயணத்திற்கு இது வேறாகும்.)

திருவளர் சுடர் உருவே சிவைகரம் அமர் உருவே
அருமறை புகழ் உருவே அறவர்கள் தொழும் உருவே
இருள்தபும் ஒளி உருவே என நினை எனது எதிரே
குருகுகன் முதல் மயிலே கொணர்தியுன் இறைவனையே. 1

மறைபுகழ் இறைமுனரே மறைமுதல் பகர் உருவே
பொறைமலி உலகு உருவே புனநடை தரும் உருவே
இறைஇள முக உருவே என நினை எனது எதிரே
குறைவு அறு திருமயிலே கொணர்தியுன் இறைவனையே. 2

இதரர்கள் பலர் பொரவே இவண் உறை எனது எதிரே
மதிரவி பலஎனதேர் வளர் சரண் இடை எனமா
சதுரொடு வருமயிலே தடவரை அசைவுறவே
குதி தரும் ஒரு மயிலே கொணர்தியுன் இறைவனையே. 3

பவநடை மனுடர்முனே படர்உறும் எனது எதிரே
நவமணி நுதலணிஏர் நகைபல மிடறு அணிமால்
சிவணிய திருமயிலே திடனொடு நொடிவலமே
குவலயம் வரும் மயிலே கொணர்தியுன் இறைவனையே. 4

அழகுஉறு மலர்முகனே அமரர்கள் பணிகுகனே
மழஉரு உடையனே மதிநனி பெரியவனே
இழவுஇலர் இறையவனே என நினை எனது எதிரே
குழகு அது மிளிர்மயிலே கொணர்தியுன் இறைவனையே. 5

இணை அறும் அறுமுகனே இதசசி மருமகனே
இணர் அணி புரள்புயனே என நினை எனது எதிரே
கணபண அரவுஉரமே கலைவுற எழுதரும் ஓர்
குணம் உறு மணிமயிலே கொணர்தியுன் இறைவனையே. 6

எளியவ என் இறைவ குகா எனநினை எனது எதிரே
வெளிநிகழ் திரள்களைமீன் மிளிர்சினை எனமிடைவான்
பளபள எனமினுமா பலசிறை விரிதருநீள்
குளிர்மணி விழிமயிலே கொணர்தியுன் இறைவனையே. 7

இலகு அயில் மயில் முருகா எனநினை எனது எதிரே
பலபல களமணியே பலபல பதமணியே
கலகல கலஎனமா கவினொடு வரும் மயிலே
குலவிடு சிகைமயிலே கொணர்தியுன் இறைவனையே. 8

இகல்அறு சிவகுமரா எனநினை எனது எதிரே
சுகமுனி வரர்எழிலார் சுரர்பலர் புகழ்செயவே
தொகுதொகு தொகு எனவே சுரநடம் இடும்மயிலே
குகபதி அமர்மயிலே கொணர்தியுன் இறைவனையே 9

கருணை பெய் கனமுகிலே கடமுனி பணிமுதலே
அருணையன் அரன் எனவே அகம்நினை எனது எதிரே
மருமலர் அணிபலவே மருவிடும் களமயிலே
குருபல அவிர்மயிலே கொணர்தியுன் இறைவனையே. 10





பாம்பன்

ஸ்ரீமத் குமர குருதாச சுவாமிகள் அருளிய

# குமாரஸ்தவம்

ஓம் ஷண்முக பதயே நமோ நம:
ஓம் ஷண்மத பதயே நமோ நம:
ஓம் ஷட்க்ரீவ பதயே நமோ நம:
ஓம் ஷட்க்ரீட பதயே நமோ நம:
ஓம் ஷட்கோண பதயே நமோ நம:
ஓம் ஷட்கோச பதயே நமோ நம:
ஓம் நவநிதி பதயே நமோ நம:
ஓம் ஸுபநிதி பதயே நமோ நம:
ஓம் நரபதி பதயே நமோ நம:
ஓம் சுரபதி பதயே நமோ நம:
ஓம் நடச்சிவ பதயே நமோ நம:
ஓம் ஷட க்ஷர பதயே நமோ நம:
ஓம் கவிராஜ பதயே நமோ நம:
ஓம் தபராஜ பதயே நமோ நம:
ஓம் இகபர பதயே நமோ நம:
ஓம் புகழ்முனி பதயே நமோ நம:
ஓம் ஜய ஜய பதயே நமோ நம:
ஓம் நய நய பதயே நமோ நம:
ஓம் மஞ்சுள பதயே நமோ நம:
ஓம் குஞ்சரீ பதயே நமோ நம:
ஓம் வல்லீ பதயே நமோ நம:
ஓம் மல்ல பதயே நமோ நம:
ஓம் அஸ்த்ர பதயே நமோ நம:
ஓம் சஸ்த்ர பதயே நமோ நம:
ஓம் சஷ்டீ பதயே நமோ நம:
ஓம் இஷ்டி பதயே நமோ நம:
ஓம் அபேத பதயே நமோ நம:
ஓம் ஸுபோத பதயே நமோ நம:
ஓம் வ்யூஹ பதயே நமோ நம:
ஓம் மயூர பதயே நமோ நம:
ஓம் பூத பதயே நமோ நம:
ஓம் வேத பதயே நமோ நம:
ஓம் புராண பதயே நமோ நம:
ஓம் ப்(பி)ராண பதயே நமோ நம:
ஓம் பக்த பதயே நமோ நம:
ஓம் முக்த பதயே நமோ நம:
ஓம் அகார பதயே நமோ நம:
ஓம் உகார பதயே நமோ நம:
ஓம் மகார பதயே நமோ நம:
ஓம் விகாச பதயே நமோ நம:
ஓம் ஆதி பதயே நமோ நம:
ஓம் பூதி பதயே நமோ நம:
ஓம் அமார பதயே நமோ நம:
ஓம் குமார பதயே நமோ நம:

---

## குமார தந்திரம்

ஓம் அசுரகுல மர்த்தநாய யோகாய யோகாதிபதயே
சாந்தாய சாந்த ரூபிணே சிவாய சிவநந்தநாய சஷ்டீப்ரியாய
சர்வக்ஞான ஹ்ருதாய ஷண்முகாய ஸ்ரீம் ஸ்ரீம் ஹ்ரீம் க்ஷம்
குஹரவி கங்காலாய காலரூபிணே சுர ராஜாய சுப்ரமண்யாய நம:

உ

முருகன் துணை

# சண்முக கவசம்

அண்டமாய் அவனி ஆகி அறியொணாப் பொருளது ஆகித்
தொண்டர்கள் குருவும் ஆகித் துகள் ஆறு தெய்வம் ஆகி
எண் திசை போற்ற நின்ற என் அருள் ஈசன் ஆன
திண்திறல் சரவணத்தான் தினமும் என் சிரசைக் காக்க. 1

ஆதி ஆம்கயிலைச் செல்வன் அணி நெற்றி தன்னைக் காக்க
தாது அவிழ் கடப்பம் தாரான் தான் இரு நுதலைக் காக்க
சோதி ஆம் தணிகை ஈசன் துரிசுஇலா விழியைக் காக்க
நாதன் ஆம் கார்த்திகேயன் நாசியை நயந்து காக்க. 2

இரு செவிகளையும் செவ்வேள் இயல்புடன் காக்க, வாயை
முருகவேள் காக்க நாப்பல் முழுதும்நல் குமரன் காக்க
துரிசு அறு கதுப்பை யானைத் துண்டனார் துணைவன் காக்க
திருவுடன் பிடரிதன்னைச் சிவசுப்பிரமணியன் காக்க. 3

ஈசன் ஆம் வாகுலேயன் எனது கந்தரத்தைக் காக்க
தேசுஉறு தோள்விலாவும் திருமகள் மருகன் காக்க
ஆசு இலா மார்பை ஈர்ஆறு ஆயுதன் காக்க என்றன்
ஏசுஇலாமுழங்கை தன்னை எழில் குறிஞ்சிக்கோன் காக்க. 4

உறுதியாய் முன்கை தன்னை உமைஇள மதலை காக்க
தறுகண் ஏறிடவே என்கைத் தலத்தை மாமுருகன் காக்க
புறங்கையை அயிலோன் காக்க பொறிக்கர விரல்கள் பத்தும்
பிறங்குமால்மருகன் காக்க பின் முதுகைச் சேய் காக்க. 5





ஊண் நிறை வயிற்றை மஞ்ஞை ஊர்தியோன் காக்க வம்புத்
தோள்நிமிர் சுரேசன் உந்திச் சுழியினைக் காக்க குய்ய
நாணினை அங்கி கௌரி நந்தனன் காக்க பீஜ
ஆணியைக் கந்தன் காக்க அறுமுகன் குதத்தைக் காக்க 6

எஞ்சிடாது இடுப்பை வேலுக்கு இறைவனார் காக்க காக்க
அம்சகனம் ஓர் இரண்டும் அரன்மகன் காக்க காக்க
விஞ்சிடு பொருள் காங்கேயன் விளர் அடித் தொடையைக்காக்க
செம்சரண் நேச ஆசான் திமிரும் முன்தொடையைக் காக்க. 7

ஏரகத் தேவன் என்தாள் இருமுழங் காலும் காக்க
சீருடைக் கணைக்கால் தன்னைச் சீரலை வாய்த்தே காக்க
நேர் உடைப் பரடு இரண்டும் நிகழ் பரங்கிரியன் காக்க
சீரிய குதிக்கால் தன்னைத்திருச்சோலைமலையன் காக்க. 8

ஐஉறு மலையன் பாதத்து அமர்பத்து விரலும் காக்க
பை உறு பழநிநாதபரன் அகம்காலைக் காக்க
மெய்யுடல் முழுதும் ஆதி விமல சண்முகவன் காக்க
தெய்வநாயக விசாகன் தினமும் என் நெஞ்சைக் காக்க. 9

ஒலிஎழ உரத்த சத்தத்தொடுவருபூதப்பிரேதம்
பலிகொள் இராக்கதப்பேய் பல கணத்து எவை ஆனாலும்
கிலிகொள எனைவேல் காக்க கெடுபரர் செய்யும் சூன்யம்
வலிஉள மந்த்ர தந்த்ரம் வருத்திடாது அயில்வேல் காக்க. 10

ஓங்கிய சீற்றமே கொண்டு உவணிலில் வேல் சூலங்கள்
தாங்கிய தண்டம் எஃகம் தடிபரசு ஈட்டி ஆதி
பாங்குடை ஆயுதங்கள் பகைவர் என்மேலே ஓச்சின்
தீங்கு செய்யாமல் என்னைத் திருக்கைவேல் காக்க காக்க. 11





ஔவியம் உளர் ஊன் உண்போர் அசடர்பேய் அரக்கர் புல்லர்
தெவ்வர்கள் எவரானாலும் திடமுடன் எனை மல்கட்டத்
தவ்வியே வருவாராயின் சராசரம் எலாம் புரக்கும்
கவ்வுடைச் சூரசண்டன் கைஅயில் காக்க காக்க 12

கடுவிடப் பாந்தள் சிங்கம் கரடி நாய் புலி மா யானை
கொடிய கோள்நாய் குரங்கு கோலமார்ச்சாலம் சம்பு
நடையுடை எதனாலேனும் நான் இடர்ப்பட்டிடாமல்
சடிதியில் வடிவேல் காக்க சானவி முளைவேல் காக்க. 13

ஙகரமே போல் தழீஇ ஞானவேல் காக்க வன்புள்
சிகரிதேள் நண்டுக்காலி செய்யன்ஏறு ஆலப்பல்லி
நகமுடைய ஓந்தி பூரான் நளிவண்டு புலியின் பூச்சி
உகமிசை இவையால் எற்கோர் ஊறிலாது ஐவேல் காக்க. 14

சலத்தில் உய்வன்மீன் ஏறு தண்டுடைத் திருக்கை மற்றும்
நிலத்திலும் சலத்திலும்தான் நெடுந்துயர் தரற்கே உள்ள
குலத்தினால் நான்வருத்தம் கொண்டிடாது அவ் அவ்வேளை
பலத்துடன் இருந்து காக்க பாவகி கூர்வேல் காக்க. 15

ஞமலி அம் பரியன் கைவேல் நவக்கிரகக் கோள் காக்க
சுமவிழி நோய்கள் தந்த சூலை ஆக்கிராண ரோகம்
திமிர்கழல் வாதம் சோகை சிரம் அடி கர்ண ரோகம்
எமை அணுகாமலே பன்னிருபுயன் சயவேல் காக்க. 16

டமருகத்து அடிபோல் நைக்கும் தலைஇடி கண்டமாலை
குமுறு விப்புருதி குன்மம் குடவலி ஈழை காசம்
நிமிரொணாது இருத்தும் வெட்டை நீர்ப்பிரமேகம் எல்லாம்
எமை அடையாமலே குன்று எறிந்தவன் கைவேல் காக்க. 17

இணக்கம் இல்லாத பித்த எரிவுமா சுரங்கள் கைகால்
முணக்கவே குறைக்கும் குஷ்டம் மூலவெண்முளை தீமந்தம்
சணத்திலே கொல்லும் சன்னி சாலம் என்று அறையும் இந்தப்
பிணிக்குலம் எனை ஆளாமல் பெரும் சக்தி வடிவேல் காக்க. 18

தவனம் மாரோகம் வாதம் சயித்தியம் அரோசகம் மெய்
சுவறவே செய்யும் மூலச்சூடு இளைப்பு உடற்று விக்கல்
அவதிசெய் பேதி சீழ்நோய் அண்டவாதங்கள் சூலை
எவையும் என்னிடத்து எய்தாமல் எம்பிரான் திணிவேல் காக்க. 19

நமைப்புஉறு கிரந்தி வீக்கம் நணுகிடு பாண்டு சோபம்
அமர்த்திடு கருமை வெண்மை ஆகு பல்தொழுநோய் கக்கல்
இமைக்கும் முன் உறுவலிப்போடு எழுபுடைப் பகந்தர் ஆதி
இமைப்பொழுதேனும் என்னை எய்தமல் அருள்வேல் காக்க. 20

பல்லது கடித்து மீசை படபடஎன்றே துடிக்கக்
கல்லினும் வலிய நெஞ்சம் காட்டியே உருட்டி நோக்கி
எல்லினும் கரியமேனி எமபடர்வரினும் என்னை
ஒல்லையில் தாரகாரி ஓம் ஐம் ரீம் வேல் காக்க. 21

மண்ணிலும் மரத்தின் மீதும் மலையிலும் நெருப்பின் மீதும்
தண்நிறை ஜலத்தின் மீதும் சாரிசெய் ஊர்தி மீதும்
விண்ணிலும் பிலத்தின் உள்ளும் வேறு எந்த இடத்தும் என்னை
நண்ணி வந்து அருள் ஆர் சஷ்டிநாதன் வேல் காக்க காக்க.22

யகரமே போல் ஏந்தும் நறும்புயன் வேல் முன் காக்க
அகரமே முதலாம் ஈராறு அம்பகன் வேல் பின் காக்க
சகரமோடு ஆறும் ஆனோன் தன்கைவேல் நடுவில் காக்க
சிகரம் மின் தேவ மோலி திகழ் ஐவேல் கீழ்மேல் காக்க. 23

ரஞ்சிதமொழி தேவானை நாயகன் வள்ளி பங்கன்
செஞ்சய வேல் கிழக்கில் திடமுடன் காக்க அங்கி
விஞ்சிடு திசையின் ஞான வீரன்மேல் காக்க தெற்கில்
எஞ்சிடாக் கதிர்காமத்தோன் இகல்உடைக் கரவேல் காக்க. 24

லகரமே போல் காளிங்கன் நல் உடல் நெளிய நின்று
தகர மர்த்தனமே செய்த சங்கரி மருகன் கைவேல்
நிகழ்எனை நிருதி திக்கில் நிலைபெறக் காக்க மேற்கில்
இகல் அயில் காக்க வாயுவினில் குகன் கதிர்வேல் காக்க. 25

வடதிசை தன்னில் ஈசன் மகன் அருள் திருவேல் காக்க
விடைஉடை ஈசன் திக்கில் வேத போதகன் வேல் காக்க
நடக்கையில் இருக்கு ஞான்று நவில்கையில் நிமிர்கையில் கீழ்க்
கிடக்கையில் தூங்கு ஞான்று கிரிதுளைத்துள வேல் காக்க. 26

இழந்து போகாத வாழ்வை ஈயும் முத்தையனார் கைவேல்
வழங்கு நல் ஊண் உண்போதும் மால் விளையாட்டின் போதும்
பழம்சுரர் போற்றும் பாதம் பணிந்து நெஞ்சு அடக்கும் போதும்
செழும் குணத்தோடே காக்க திடமுடன் மயிலும் காக்க. 27

இளமையில் வாலிபத்தில் ஏறிடு வயோதிகத்தில்
வளர் அறுமுகச் சிவன்தான் வந்து எனைக் காக்க காக்க
ஒளி எழுகாலை முன்எல் ஓம் சிவசாமி காக்க
தெளிநடு பிற்பகற்கால் சிவகுருநாதன் காக்க. 28

இறகுஉடைக் கோழித் தோகைக்கு இறை முன்இராவில் காக்க
திறல்உடைச் சூர்ப்பகைத்தே திகழ் பின்இராவில் காக்க
நறவுசேர் தாள் சிலம்பன் நடுநிசி தன்னில் காக்க
மறைதொழு குழகன் எம்கோன் மாறாது காக்க காக்க 29

**இனம் எனத் தொண்டரோடும் இணைக்கிடும் செட்டி காக்க**
**தனிமையில் கூட்டம் தன்னில் சரவணபவனார் காக்க**
**நனி அனுபூதி சொன்ன நாதர்கோன் காக்க இத்தைக்**
**கனிவொடு சொன்ன தாசன் கடவுள்தான் காக்க வந்தே. 30**

(இதனையே வாற்சல்லிய விசுவாசத்துடன் நாள் ஒன்றுக்கு ஆறு முறை படிப்பவர்கள் எத்துன்பத்தினின்றும் விடுதலையுறுவார்கள். முடிவில் முக்தியுமடைவார்கள். இரவில் வழி நடக்கும்போதும், வனத்தில் செல்லும் போதும், நோயால் வருந்தும் போதும், யாதானுமொரு துன்பத்தில் அகப்பட்டுக் கொண்ட போதும், நித்திரை செய்ய ஆரம்பிக்கும் போதும், மரண காலத்திலும் இக்கவசம் படிக்கப்படுமாயின் யாதொரு துன்பமில்லை என்க!

## <u>சுவாமிகளின் சத்திய வாக்கு</u>

தாமரைக்கு நீர் இன்றி சார்பு இலை அவ்வாறு எனக்கும்
போம்வரைக்கும் நின்னையல்லால் போக்கு இல்லை ஓம் உரைக்கும்
ஆண்டகையே செவ்வேளே ஆனந்ததாண்டவனே
யாண்டும் இது சத்தியமே யாம் **(காசி யாத்திரை)**

★ தன்னடியவர்க்குச் செய்யும் அன்னம் ஆடை முதலிய சருவோபசாரங்களையுந் தனக்காகச் செய்யப்பட்டன வென ஏற்று கொண்டு செய்தோரைத் தாக்கத்தி லிருந்துந் திருவருட் பெருங்கடலே முருகவேள். அவனைச் சோதிக்க எவருமெண்ணலாகாது. கடின சித்தமுள்ளோருக்கு அவன் அண்மையாகமாட்டான்

**– ஸ்ரீமத் பாம்பன் சுவாமிகள் வெளியறிவுறூஉ**

★ முத்து ஊனிலுண்டாகியும், பட்டு பூச்சியிலுண்டாகியும், ஊது குழலோசைகள் எச்சிற்காற்றின் சம்பந்தமாய்த் தோன்றியும், வாய்திறந்து பாடுபாட்டுகள் அவ்வாறு தோன்றியும், மேம்பாடுடைமை கொண்டன. அசத்திய நீத்த அறிவுடையார் எத்தேசத்தில் எக்குடியிற் றோன்றினும் மேம்பட்டு டையராயினர் ஆவர்.

**– ஸ்ரீமத் பாம்பன் சுவாமிகள் வெளியறிவுறூஉ**

# ஓம் குமர குருதாச குருப்யோ நம:

## "குமாரஸ்தவம் "இராமானுஜம் சுவாமிகள் சரிதம்
மற்றும் மலரும் அனுபவங்கள்

மனிதர்களாக பிறந்த அனைவரும் அறிவைப் பெற்றிருந்தாலும் மிகச் சிலரே அதனை முழுமையாகப் பயன்படுத்தும் ஆற்றலைப் பெற்றிருக்கிறாரகள். அந்த ஆற்றல் அறிவின் மூலமாக தெய்வீக நிலையை அறிந்து கொள்கிறார்கள். அப்படி உணர்ந்த சிலர், அந்த மோனநிலையிலேயே அமிழ்ந்தும் விடுகிறார்கள். மற்றும் சிலர். தாம் பெற்ற அநுபவத்தை மற்றவர்களும் பெறவேண்டுமென்ற பெரு நோக்கோடு கீழே இறங்கி வருகிறார்கள். வந்தவர்கள் பேரின்பத்தை விளக்கி, ஏறமுடியாதவர்களை வலிவு கொடுத்து ஏறச் செய்து இன்சுவையை அநுபவிக்கச் செய்கின்றார்கள். அப்படிப்பட்ட குருமார்களில் ஒருவர், அவரை –

"பார்க்கப் பாவம் போம், பரிசிக்க ஞானமுண்டாஞ்
சேர்க்கத் திருத்தாள் சிவமாவாய் – ஆர்க்குஞ்
சுருதிப் பிரமாணந் தோன்றல் அவதூதர்
பருதி இருள்போலப் பார்" – என்பது போல

நமது எண்ண அலைகளை மேம்படுத்த, பிரபஞ்சம் முழுதும் வியாபித்த ஞான ஒளியோடு சேர வழிகாட்டிய வித்தகர்.

தக்க குரு இல்லாது தடுமாறி நிலைகுலைந்து –

"குருட்டினை நீக்குங் குருவினைக் கொள்ளார்
குருட்டினை நீக்காக் குருவினைக் கொள்வார்
குருடுங் குருடுங் குருட்டாட்டம் ஆடிக்
குருடுங் குருடுங் குழி விழுமாறே"

எனத் திருமூலர் சொல்வது போல, வழித் தெரியாது தவித்த பலருக்குத் தனது சேவை மூலம் பலன் தேடித் தந்தவர் எங்கள் குருநாதர், எல்லோராலும் "அப்பா" என்று அன்போடு அழைத்து போற்றப்படுவர் ஆவார்.

குமாரஸ்தவம் இராமானுஜம் சுவாமிகள் பாம்பன் ஸ்ரீமத் குமரகுருதாச சுவாமிகள் அருளிய மஹாமந்திரம் குமாரஸ் தவத்தால் உயிர் பெற்றவர். இந்த மஹாமந்திரப் பலனை முழுமையாகப் பெற்று குமாரஸ்தவமே சாட்சி யாக உலகின் மத்தியில் பிரகாசிக்கும் குமாரஸ்தவம் அப்பா அவர்கள் சுக்ல வருடம் ஐப்பசி மாதம் 1929ல் **30.5.1929 (பாம்பன் ஸ்ரீமத் குமரகுருதாச சுவாமிகள் உருவத் திருமேனி மறைந்து, ஆறுமாத காலத்திற்குப் பின்)** சீர்மிகு சென்னை அருகே பொன்னேரி தாலுகா, மீன்சூர் என்ற இடத்தில் பிறந்தார்.

மிகுந்த செல்வாக்கோடு 'சல்லா' என்றக் குடும்பப் பெயருடன் விளங்கிய, வைணவப் பெரியார் தெய்வத்திரு கோவிந்தசாமி நாயுடு அவர்களுக்கும், அவரது துணைவியார் ஆதிலெட்சுமி அம்மாளுக்கும் ஏழாவது செல்வப் புதல்வராக அவதரித்தார்.

இவரது உடன்பிறந்த சகோதரர்கள் நான்குபேர், சகோதரிகள் மூன்றுபேர். குடும்பத்தில் அனைவரும் வியாபாரத்தை மேற்கொண்டவர்கள். "இராமானுஜம்" என்ற நாமம் தரிக்கப் பெற்று வளர்ந்து வந்த அப்பா அவர்களுக்கு, மூன்று வயதில் ஸ்ரீ ரங்கத்தில் வைணவ நெறி மாறாமல் "முத்திரை ஸ்தானம்" புஜங்களில் பொறிக்கப்பட்டது.

சிறு வயதிலேயே இவரது சிறிய தந்தையார் தெய்வத்திரு நரசிம்மலு நாயுடு அவர்களும், அன்னாரது துணைவியார் கோமளாம்பாள் அவர்களும் இவரை சுவீகாரம் எடுத்து வளர்த்து வந்தார்கள். குமாரஸ்தவம் அப்பா அவர்களின் நான்கு சகோதரர்களில்



ஒருவர் சிறுவயதிலேயே மறைந்து விட்டார். மிகுந்த சூட்டிகையும், திறனும் இருந்தாலும் அப்பா அவர்கள் படித்தது **(INTER MEDIUT PASS)** கொஞ்சம் தான். **1954**ல் ரயில்வே பெட்டிகள் தயாரிக்கும் தொழிற்சாலையில் குமாஸ்தா வேலையில் சேர்ந்தார்கள். குடும்பத்திலேயே முதன்முதலாக, வியாபார நிலையை விட்டு, வெளியே வேலைக்குச் சேர்ந்தவர் அப்பா அவர்களே!

அப்பா அவர்கள் அவரது சொந்தத் தாய்மாமன் மகளான மங்கையருள் மாணிக்கம் ஆண்டாள் அவர்களைத் திருமணம் செய்து கொண்டார்கள். முக்கிய சம்பவங்கள் மிகுதியாக இல்லாத அப்பா அவர்களின் வாழ்க்கையில் திடீரென புயல் வீசியது! வாழ்வின் பாதை தடம் புரண்டது!!

**1964**ம் வருடம் திடீரென அப்பாவுக்கு இருதயநோய் கண்டது. உடலுக்கும், உயிருக்கும் ஆதாரமான பரம்பொருள் இருப்பதையே அறியாது, மனம் போன போக்கில் வாழ்ந்த அப்பா அவர்களுக்கு இருதயநோய் நிபுணர் டாக்டர் செரியன் அவர்கள் இருதய அறுவை சிகிச்சை செய்தார். மூன்று அறுவை சிகிச்சையும் நான்காவதாக திறந்த இருதய புறவழி அறுவை **(OPEN BY PASS)** சிகிச்சையும் செய்து, இருதயம் நுரையீரல் ஆகியன சரிசெய்யப்பட்டன. அப்பா அவர்கள் பட்ட நரகவேதனை எழுத்தில் வடிக்க முடியாது. உடலிலே பூணுல் போட்டது போன்று குறுக்காகப் பிளந்து செய்த அறுவை சிகிச்சைகளால், ஒன்றரை வருடங்கள் மருத்துவ மனையிலேயே இருக்க நேரிட்டது.

அப்பா அவர்கள் மருத்துவமனையிலிருந்த ஒன்றரை வருடங்களாக நோயாளிகளின் தடுமாற்றம், தவிப்பு, வேதனைக்குரல்கள், உயிர்பிரியத் துடிக்கும் துடிப்பு, உயிர்பிரிந்த காட்சிகள், உயிருக்கு பயந்த ஓலங்கள், ஆகியனக் கண்டார்கள். அப்பப்பா! இதனால் கவலையும் அச்சமும் ஆட்டிப்படைக்க அப்பா அவர்கள் அமைதியிழந்தார்கள். நாட்கள் ஓடின, மறைந்தன. வேதனைகள் மறையவேயில்லை. நான்காவது அறுவை







சிகிச்சை முடிந்து படுக்கையில், அப்பா அவர்கள் உணர்வற்ற நிலையில் இருப்பதாக மருத்துவ நிபுணர்கள் எண்ணினார்கள். அப்பாவின் பக்கத்திலேயே நின்று இவரைப் பற்றியும், நோயைப் பற்றியும், ஆயுள்கெடு வைப் பற்றியும் பேசி 5 வருடங்கள் மட்டுமே இந்த உயிர் தாங்கும் என்று முடிவு செய்து, அப்பா விழித்தவுடன் 5 வருடங்கள் மட்டுமே உயிரோடு இருப்பீர்கள் என்று அப்பாவின் மன ஆறுதலுக்காக கூறினார்கள். அப்பாவை சில நாட்களில் உணர்வற்ற பொம்மைபோல வீட்டிற்கு அனுப்பி வைத்தார்கள்.

பூஜை, த்யானம், மந்திரங்களை கனவிலும் அறியாமல் அப்பா அவர்களுக்கு விரக்தி மேலிட்டது. இந்நிலையில் ஒரு நாள் அப்பாவின் உள்ளுணர்வு ஓம் என்ற மந்திரத்தை சொல் என்றது. வீட்டிலும் வெளியிலும் நடமாடமுடியாத நிலையில் அமர்ந்து மிக வேடிக்கையாக ஓம்காரத்தை சொல்ல ஆரம்பித்தார்.

ஒரு நாள் பிரம்ம முகூர்த்தம் போது வழக்கம்போல் அப்பா அவர்கள் ஓம்காரத்தை உருவேற்றித் கொண்டிருந்தார்கள். அப்போது நல்ல தேஜஸும், முகப் பொலிவும கொண்ட ஒரு அருட் பெரியவர் வந்தார். இவரை நோக்கி வந்தவர், அப்பாவின் சிரம் மீது இரு கரங்களையும் வைத்து ஆசீர்வதித்தார். பின் எதுவுமே பேசாது சென்றுவிட்டார் இந்த காட்சி பிரமையா? இல்லை உண்மைதான்! வந்தவர் யார்? அவர் தம் பெயர் என்ன? எவ்வித பூஜை புனஸ்காரங்களும் தெரியாத தம்மைக் காண வந்த சிவஞானி யார்? என்று அப்பா அவர்கள் மூளையை குழப்பிக் கொண்டு சதா அந்த சிந்தனையிலேயே இருந்தார்கள்.

காலமும் சென்றது. ரணங்களில் அடிக்கடி சீழ் பிடித்தது மிகுந்த சிரமத்தை அனுபவித்த அப்பா அவர்களுக்கு சிறிது சிறிதாக நடக்கவும் பயணஞ் செய்யவும் முடிந்தது. அடுத்தடுத்து செய்த அறுவை சிகிச்சைகளின் பலனாக இவருக்கு இல்லற வாழ்வில் ஈடுபட முடியாது ஆனது. குழந்தை பாக்கியம் இல்லையாதலால் அப்பாவும், அம்மாவும் ஒரு ஒருவருக்கொருவர் குழந்தைகளாகவே மாறிவிட்டார்கள்.

நல்ல மழையில் மழைக் கோட்டாணிந்து, தனிமையாக வெகுதூரம் நடந்து, களைத்து அயரும் பொழுதுபோக்கு அப்பாவிற்கு பிடித்த ஒன்றாகும். பெரும் சூறாவளியும் மழையும், கிளைவ் பேட்டரிஷாப் ராயபுரத்தில் நின்றிருந்த போது பெருங்காற்று அப்பா அவர்களை தூக்கியெறிந்தது. இதனால் வலது கை முறிந்தது. மீண்டும் மருத்துவ மனை மீண்டும் வேதனை, துன்பம், அறுவை சிகிச்சையில் மாறாத ரணங்கள், கெடு வைக்கும் மருத்துவ நிபுணர்களின் பேச்சு, முறிந்த கைக் கட்டுகள் இவற்றுடன் பெரம்பூர் செல்லக் கூடிய நிலை அப்பாவுக்கு ஏற்பட்டது.

பெரம்பூரில், அப்பா அவர்களுக்கு ஒரு பெரியவர் மந்திரங்கள் அச்சிடப்பட்ட ஒரு அட்டையைத் தந்தார்கள். வேதனையின் மொத்த உருவான அப்பா அவர்களுக்கு அந்த அட்டைதான், அட்டையிலுள்ள மந்திரங்கள் தான் தன் வாழ்வை திசை திருப்பப்போகும் **மஹாமந்திரம்** என்றே தெரியாது. அந்த **மஹாமந்திர குமாரஸ்தவத்தை** காலநேரமின்றி கணக்கின்றி சொல்லத் தொடங்கினார்கள். அப்பா அவர்கள் குமாரஸ்தவத்தை காலநேரமின்றி சொல்லியதால் குமாரஸ்தவம் அப்பா அவர்களை ஆளத் தொடங்கியது. ஏதோ அருட்சக்திகள் தூண்டபப்பட்டன. வேதனை – விலங்குகள் தகர்ந்தன. துன்பங்களுக்கு பெருமருந்து கிடைத்துவிட்டது.

அப்பா அவர்கள் அருட்பெரியவர் ஒருவர் வீடு தேடி வந்து ஆசீர்வதித்தார். சொல்லிவைத்தாற் போல "குமாரஸ்தவம்" கிடைத்தது, ஆசீர்வாதம் கிடைத்தது. எல்லாம் புது அநுபவமாகத் திகழ்ந்தது. இடைவிடாது "குமாரஸ்தவ" பாராயணம் நடந்தது. சுதி தப்பாது தாளம் தவறாதுலயத்துடன் உரு ஏறியது. என்ன ஆச்சரியம்! 5 வருடமாக வேதனை தந்த ரணங்கள் ஆறின. வேதனைகள் மறைந்தன குமாரஸ்தவ மஹாமந்திர அலைகள் அப்பா அவர்களது உள்ளும் புறமும் நிறைந்தது. அப்பா அவர்களுக்கு நோயின் வேதனை, அச்சம், கவலைகள் மறைந்தன.





மருத்துவ பரிசோதனைக்காக மீண்டும் மருத்துவமனைக்குச் சென்றபோது, மருத்துவ நிபுணர்களுக்கு ஆச்சரியம் வியப்பு! என்ன மாறுதல்! இவர் இன்னும் உயிருடன் வாழ்கின்றாரா? இது நடக்கக் கூடியதுதானா? இந்த மகத்தான சக்தி எதனால் கிடைத்தது என்று குழப்பம் அடைந்தார்கள்.

இந்த மஹா மந்திரத்தை எழுதிய மகான் யார்? என்று அப்பா அவர்களின் தேடினார்கள். சில அன்பர்கள், பாம்பன் பதியில் அவதரித்த குமரகுருதாச சுவாமிகள் பற்றிக் கூறினார்கள். அவரது தவச்சாலை இருக்குமிடம் திருவான்மியூர்பதி என்பதையும் கூறினார்கள். உடனே, அங்கே அப்பா அவர்கள் சென்றார்கள். தவச் சாலைக்குப் பக்கத்திலுள்ள கட்டிடத்தில் ஒரு பெரியவரது திருவுருவப் படம் நின்ற நிலையில் காணப்பட்டது. மெய்சிலிர்க்க அப்பா அவர்கள் –

"இவர் யார்? இவரைப் பார்க்க வேண்டுமே!" என அங்குள்ளவர்களிடம் வினவினார்கள். அங்குள்ளவர்கள் வியந்து–

"இவரைப் பார்ப்பதா? இவர் உருவத் திருமேனி மறைந்து பல வருடங்களாகிறதே" என்றார்கள். அதற்கு அப்பா–

"இல்லை! இவரை நான் பார்த்திருக்கிறேன். இவர் தான் என்னை ஆசீர்வதித்தது. என் நோயைத் தீர்த்தது. எனக்கு மஹாமந்திரமான குமாரஸ்தவ அட்டையைத் தந்தவர் இவரைத் தான் தேடித் கொண்டிருக்கிறேன்" என்று ஆதங்கத்துடன் மிக உரக்கவே கூறினார்கள்.

அன்பர்கள் வியந்து,

"என்னப்பா சொல்கிறாய்"? இவரை நேருக்கு நேர் பார்த்தாயா? பெரும் பாக்கியம் தான், இவர்தான் பாம்பன் சுவாமிகள். **30.5.1929**ல் இவரது உருவத் திருமேனி மறைந்தருளி, அருவத் திருமேனியில் அன்றும் இன்றும் அருட்பாலிக்கும் கருணாமூர்த்தி! அவரது அளப்பரிய





சித்தாடல் அருள்மகிமையே மகிமை எனக் கூறினார்கள். அப்பா அவர்கள் மிக மிக வியந்து,

அடியேனின் பிழை அனைத்தும் பொறுத்தாட் கொண்ட அருட்கடலே என மனங்குளிர தரிசித்தார்கள். அன்று முதல் சமயம் வாய்க்கும்போதெல்லாம் பாம்பன் சுவாமிகள் ஆலயம் சென்று தங்கி வந்தார்கள். குமாரஸ்தவ மகிமையை உணர்ந்து, ஆயுளும், சூழ்நிலையும் அமைந்தால் இந்தக் குமாரஸ்தவத்தினை அழகாக அச்சிட்டு, எல்லோருக்கும் வழங்கும் பணிக்கே தன்னை அர்ப்பணிப்பது என்ற அருட்பணியை உயிர்மூச்சாகக் கொண்டு செயல்பட்டு வந்தார்கள், வருகவும் செய்கின்றார்கள்.

திருப்புகழ் சதுரர் சே.த. இராமலிங்கம் பிள்ளையவர்கள் சென்னை அயனாவரம் பரசுராமலிங்கேஸ்வரரர் ஆலயத்தில் பாம்பன் சுவாமிகள் இயற்றிய பஞ்சாமிர்த வண்த்திற்கு உரை சொல்லும் வைபவத்தில் அப்பா அவர்களை, புத்துயிர் தந்த குமாரஸ்தவத்தை அடைமொழியாகக் கொண்டு **குமாரஸ்தவம் இராமானுஜம்** என் வாழ்த்தினார்கள். அந்த வாழ்த்தே பெயராகத் தொடர்ந்து வருகிறது. புதிய பிறப்பு தந்தமைக்காக அந்த மஹாசக்தியையே முதல் எழுத்தாகக் கொண்டார்.

திருப்புகழ் சதுரர் சே.த. இராமலிங்கம் பிள்ளையவர்கள், திருமிகு தி.தி. குப்புசாமி செட்டியார் போன்றோர் பாம்பன் சுவாமிகளை நேரில் தரிசித்தவர்கள். இவர்களின் துணை கொண்டு 1973ல் இரவு 12 மணியளவில் 30 அடியார்களுடன் குமாரஸ்தவ பௌர்ணமி பூஜையை அப்பா அவர்கள் ஆரம்பித்தார்கள். ஆனாலும் ஒரு குருவின் துணை கொண்டு கிரமமாக செய்ய வேண்டும் என்ற ஆவலில் பாம்பன் சுவாமிகளுக்கு சடக்ஷர மந்திர உபதேசத்திற்கு ஒரு சேதுமாத வய்யரைப் போல பாம்பன் சுவாமிகள் அருளின் நிலைக்களனாய், அருட்சீடராய், அருட்பாலிக்கும் அருள்சித்தராய், இல்லற ஞானியாய்த் திகழும் துக்க நிவாரண அஷ்டக ஆசிரியர் உபாசனா குலபதி ஸ்ரீலஸ்ரீ

ஸ்ரீ துர்க்கைச் சித்தர் அவர்களை, அப்பா அவர்கள் அடிக்கடி சந்தித்து வந்தார்கள்.

ஸ்ரீ துர்க்கை சித்தர் அவர்களும், பாம்பன் குமரகுருதாச சுவாமிகள் அருள் உணர்த்த, அப்பா கேட்காமலேயே பாம்பன் சுவாமிகளின் உத்தரவுப்படி, ஷட்கோண விபூதி பூஜை செய்து, ஷடக்ஷர மஹாமந்திரத்தை உபதேசித்தருளினார்கள். அவரது உத்தரவுப்படி கிரமமாக பௌர்ணமி பூஜை செய்து பக்தர்களுக்கு விபூதி வழங்கத் தொடங்கினார்கள்.

அப்பா அவர்களுக்கு அருட் கண்களாக, அருட்குருவாக ஸ்ரீமத் பாம்பன் சுவாமிகளும், அரவணைக்கும் தாயாக ஸ்ரீ துர்க்கை சித்தர் அவர்களும் திகழ்கிறார்கள். அப்பா அவர்கள் ரெயில்வே பெட்டித் தொழிற்சாலையில் – அலுவலக கண்காணிப்பு மேலாளர் பதவியிலிருந்து – 31.12.1990 அன்று ஓய்வு பெற்று தற்சமயம் ஓய்வூதியம் பெற்று வருகிறார்கள்.

மேல்நோக்கிச் சுற்றப்பட்ட ஜடாமுடி, பரந்த நெற்றியில் துலங்கும் திருநீறு, வெண்மையான தாடி, கருணை சுரக்கும் கண்கள், செம்மஞ்சள் நிற ஆடைகள், சாந்தம் தவழும் முகம் அரவணைக்கும் பேச்சு, சிறுபிள்ளை போன்ற சிரிப்பு பூவினும் மெல்லிய இதயம், உடனே வணங்கவேண்டும் என்ற தோற்றம் கொண்ட மொத்த உருவம் தான் குமாரஸ்தவம் அப்பா அவர்கள்.

- மலைப்படி ஏறக்கூடாது, அதிக தூரம் நடக்கக் கூடாது, 5 வருடங்களுக்கு மேல் உயிர் தரிக்காது என்று கெடுவைத்த அப்பாவின் வாழ்வை 51 வருட காலமாக நீடிக்கச் செய்தது யார்?
- வேதனை மிகுந்த நேரம் அப்பாவை ஆசீர்வதித்து குமாரஸ்தவ அட்டை வழங்கியது யார்?

- ❖ அருட்தாயாய் அரவணைத்து, அறிய வேண்டியதை அறிய வைத்து, தெரியவேண்டியதை தெளிய வைத்து உயர்வழி காட்டிய உத்தமர் யார்?

- ❖ திருப்புகழ் சதுரர் மூலமாக 1973ல் முப்பது அடியார்களுடன் குமாரஸ்தவ பூஜையை துவக்கியது யார்?

- ❖ அருளாளர்கள், அடியவர்கள், அருள்சித்தர்கள், அருட்பணியாளர்களை அப்பாவுக்கு உறவாக்கி, பெரும்பாசப் பிணைப்பை ஏற்படுத்தியது யார்?

- ❖ குமாரஸ்தவம் அச்சிட, பதிவுகற்கள் பதிக்க, அருள் விழாக்கள் தக்கவர் மூலமாக ஆவன செய்ய அருட்பணி வழங்கியவர் யார்?

- ❖ இன்று பல்லாயிரக் கணக்கானோர் அப்பா! அப்பா! என்று அழைக்கும் உறவுமுறையை வளர்த்து, அன்புப் பிள்ளைகளை உருவாக்கியது யார்?

- ❖ அங்கு கூடும் அடியார்களுக்கு நன்மைகள் செய்து அப்பா விற்கு நல்லபெயரைப் பெற்றுத் தருவது யார்?

- ❖ 42 வருடகாலமாக குமாரஸ்தவ பூஜையை பௌர்ணமி தோறும் தவறவிடாது நடத்திக் கொடுப்பது யார்?

இந்த கேள்விகளை குமாரஸ்தவம் அப்பா அவர்களிடம் கேட்டால் அப்பா அவர்கள் தரும் ஒரே பதில்.

**எல்லாமே அவன் செயல் !!**

**1000 பிறை கண்ட அப்பாவுக்கு, அப்பாவு (பாம்பன் சுவாமிகள்) தந்த அனுபவங்கள் மேலும் குமாரஸ்தவ பதிவுக்கற்கள் திறக்கும்போது மலரும் பல நினைவுகளும்**

"குமாரஸ்தவம்" முதல் பதிவுக் கல் சௌகார்பேட்டை அருணாசலேஸ்வரர் ஆலயத்தில் பிரசவமாகியது. திருக்கல் திறப்பது யார் என்று எண்ணிய போது ஸ்ரீமத் பாம்பன் சுவாமிகளின் சீடர் சிவத்திரு குழந்தைவேலு முதலியார் அவர்கள் ஞாபகம் வர அவர்களைக் கண்டு என் எண்ணததைக் கூறினேன். எப்போதும் வயிற்று வலியால் வேதனை அனுபவிக்கும் அய்யா அவர்கள் விழா நெருங்கும் வேளையில் அதிக வலியுடன் இருந்தார்கள். திறப்பு விழாவிற்கு முதல்நாள் அவருடைய மூத்தப் புதல்வரை அணுகிய போது, "இவருடைய பெயரை போட்டு இருக்கிறீர்களே எந்த நிமிடமும் உயிர் பிரியலாம். தந்தைக்கு பதில் வேறு யாரையேனும் அழைத்து திறப்பு விழா நடத்துங்கள்" என்று சொன்னார்.

ஸ்ரீமத் பாம்பன் சுவாமிகளை நினைத்துக் கொண்டு "முதலியார் அய்யா குணமாகித்தான் வரப் போகிறார். அவரின் திருக் கரத்தாலே தான் பதிவுக் கல்லும் திறக்கப் போகிறது. அந்த கோலாகலமான காட்சியை எல்லோரும் தரிசிக்கப் போவது உறுதி" என முதலியாரவர்களின் மூத்தப் புதல்வரிடம் சொன்னேன். தெய்வ சங்கல்பத்தின்படி மிகச் சிறப்பாக திறப்பு விழா நடைபெற்றது. அய்யா அவர்களே ஆலயத்திற்குள் திருப்புகழ் பாடிக் கொண்டு அடியார்களுடன் வலம் வந்து விழாவைச் சிறப்பித்துத் தந்தார்கள். பாம்பன் ஸ்ரீமத் குமரகுருதாசர் அருளாலே முதல் பதிவுக்கல் முதல் பிரசவம் போல் நடைபெற்றது. எக்காரியத்திலும் முதலில் பிரமிக்க வைத்துப் பின்பு மிகமிக எளிதாக நடத்திக் கொடுக்கின்ற ஸ்ரீமத் பாம்பன் சுவாமிகளின் திருவிளையாடல்களை அனுபவித்தேன், அநுபவிக்கிறேன், சந்தோஷமாக அநுபவிப்பேன்.

எனக்கு உயிருக்கு உயிரான திருத்தலம் திருச்செந்தூராகும். அங்கு பதிவுக் கல் மிகச் சிறப்பாக வடிக்கப்பட்டு ஒரு ஜெயின் மத அன்பரால் இலவசமாக வழங்கப்பட்ட விலையுயர்ந்த (ITALIAN MARBIL) சலவைக் கல்லிலே அமைந்ததாகும். அங்குள்ள நிர்வாக அதிகாரிகள் பல உத்தரவுகளைப் போட்டு கல்லைப் பதிக்க விடவில்லை. காரணம் அந்த சமயத்தில் இந்தியா முழுவதும் அவசர கால நிலை (மிசா) சட்டம் பிரகடனப் படுத்தப்பட்டிருந்தது. பின் சென்னை திரும்பி ஆணையரை பலமுறை சந்தித்தேன். அருள்மொழிய ரசு திருமுருக கிருபானந்தவாரியார் சுவாமிகள் எனக்காக பல கடிதங்களை இந்து அறநிலைய துறைக்குத் தந்து, கேட்கவும் செய்தார்கள். இதன்பேரில், அறநிலையத் துறை மூலமாக நிர்வாகமே அந்தப் பதிவுக் கல்லை பதிக்க, எனக்குத் தெரிவித்தார்கள்.

திருக்கடையூரிலிருந்து 4 கல் தொலைவிலுள்ள திருகுராவடி – திரு இடைக்கழியில் சென்று திருக்கல்லுடன் இறங்கிய போது ஒரு அந்துவானக்காட்டில் தனியாக விட்டது போன்ற பிரமை எனக்கு. தேநீர் மட்டும் அருந்தக் கூடிய ஒரே ஒரு சிறுகுடில் அங்கு இருந்தது. எப்படியும் மூன்று நான்கு நாட்கள் வேலையிருக்கிறது. உணவைச் சமாளிப்பது எப்படி? பட்டினியுடன்தான் இத்திருப்பணி நடக்க வேண்டும் என்பது இறைவன் கட்டளை என்றால் யாம் என்ன செய்ய முடியும் குரா மரத்து நிழலிலே முருகன் விளையாடிய திருத்தலமாமே ஒரு நேரத்து உணவு கிடைத்தால் கூட பரவாயில்லையே என்று மூலவரிடம் வேண்டிக் கொண்டேன்.

அந்த ஆலயத்தைச் சேர்ந்த வயோதிக பிராமணர் ஒருவர் வந்து, எங்களின் வேலைக்கு மத்தியில் எங்களை நோக்கி கூனிக் குறுதி நின்றார். என்ன என்று வினவிய போது தங்களுக்கும் தங்களுடன் வந்தவர்களுக்கும் உணவு கொண்டு வந்துள்ளேன் என்று இட்லி, காபி, வடை, பாயாசம் உணவு என்று திக்கு முக்காட வைத்து விட்டார். மூன்று, நான்கு நாட்களும் கல்யாண விருந்து போல விருந்து

வைத்து எங்களைத் திகைப்பில் ஆழ்த்தி விட்டார். ஏதோ வாய் நனைக்க காபி கேட்டால் திகட்ட திகட்ட விருந்து கிடைத்தது. அந்த நாட்கள் என் கண்களுக்குள் நிற்கின்றன. பதிவுக் கல்லை சிவத்திரு ஏ. மங்களமுடையார் அவர்கள் திறந்து சிறப்பித்தார். இதுபோன்ற அனுபவங்களை நினைக்கும் போது எனக்குத் தோன்றும் எண்ணம் படைப்பது, ரசிப்பது, பொருள் தருவது எல்லாமே பாம்பன் சுவாமிகளே!

திருவேற்காடு சிவன் கோவிலில் முக்கிய சம்பவங்கள் இல்லாவிட்டாலும் கல் பதிவு செய்யும் போது கொத்தனாரும், சித்தாளும் கல்லைத் தாங்கி நின்று கொண்டிருந்தார்கள். அதை சுமார் நூறு அடித் தூரத்தில் இருண்ட இடத்தில் நான் நின்று பார்த்துக் கொண்டிருந்தேன் திடீரென கல்லைத் தாங்கிப் பிடித்தவர்களின் கைகள் அப்படியே தங்கத்தில் வார்த்தெடுத்தது போல, ஜொலித்துக் கொண்டிருந்ததை என் கண்ணாரக் கண்டேன். இந்த சம்பவத்திற்குப் பிறகு, எந்த ரூபத்திலும் கூட இறைவன் காட்சியளிப்பான் என்ற எண்ணமும், தெய்வ காரியங்களில் ஈடுபடும் போது அறிந்தோ அறியாமலோ நாமும் சங்கமமாகிறோம் என்பதனையும் இந்த நிகழ்ச்சி எனக்கு வலியுறுத்தியது.

நம்முள்ளே இறைவனிருப்பதை 'குமாரஸ்தவ' மந்திரங்கள் ஒலிக்கும் போது சில சமயம் நான் அனுபவிப்பதுண்டு. என்னுள்ளே இருந்து ஒருவன், நவநிதிக்கும் அதிபதி நீ, சுபநிதிக்கும் அதிபதி நீ, நீ நடக்கின்ற சவமல்ல, நடக்கின்ற சிவம் என்ற பொருள்பட புரிய வைக்கின்றான், திருநெல்வேலி மாவட்டத்தில் நீர், நீறு என்று விளிப்பது வழக்கம். சில நேரங்களில் திருநீற்றுப் பதிகம் என்காதுகளில் விழும் போது, மந்திரமாவது நீரு, வானவர் மேலது நீரு, சுந்தரமாவது நீரு, துதிக்கப்படுவது நீரு என்று நம்மையே சுட்டிக் காட்டுவது போல உணர்கிறேன். முன்பின் போகாத இடமானாலும், தனியாகவே கிளம்பிச் சென்று தரிசித்த ஸ்தலம் சுவாமிமலை திருத்தலமாகும். அங்கு முதலில் ஒரு அறை எடுத்துத் தங்கி இளைப்பாறிவிட்டு, மற்ற வேலைகளை





கவனிக்கலாம் என்று எண்ணினேன். ஆகவே அங்கு கோவிலுக்குரிய தங்கும் விடுதி அலுவலத்தில் சென்று அறை கேட்டேன். அங்குள்ள ஒருவர் "யார் யார் தங்கப் போதிறீர்கள்?" என்று கேட்டார். அதற்கு நான் "ஏன் நான் மட்டும்தான்!" என்று கூற அதற்கு அவர் "போய்யா போ! இங்கு தனியாளுக்கு அறைகள் தருவதில்லை" என்று எரிந்து விழுந்தார்.

மிகுந்த சோர்வுடன் நிர்வாக அதிகாரியை சந்திக்கச் சென்றேன், அப்போது எனக்கு இவ்வளவு ஜடா முடிகூட கிடையாது. காரியாலத்திற்குச் சென்ற போது, அங்கு பலர் அமர்ரந்து முக்கிய விஷயங்கள் ஏதோ பேசிக் கொண்டிருந்தார்கள். நான் அங்கு சென்ற போது அனைவரும் எழுந்து நின்றார்கள். நிர்வாக அதிகாரியான உயர்திரு முருகன் அவர்களது முகம் மிகவும் வாட்டமாகவும் வேதனையுடனும் இருந்தது. நான் வந்த விஷயத்தைக் கூறினேன். அனைவருக்கும் விபூதி வழங்கினேன். நிர்வாக அதிகாரிக்கு விபூதி வழங்கும் போது சிறிய வேல் ஒன்றும் வழங்க வேண்டுமென்று எனக்குத் தோன்றியது. அவருக்கு அதை வழங்க, அவர் அப்படியே வாங்கிக் கொண்டு நாற்காலியுடன் பின்புறம் மயங்கிச் சாய்ந்தார். எனக்கு எதுவுமே புரியவில்லை. பிறகு, எனக்கு அறை ஏற்பாடு செய்து தந்தார்கள்.

கோயிலுக்குள் சென்று பதிவுக் கல்லுக்கான பார்வையான இடத்தைத் தேடினேன். அங்கு ஓர் இடம் மனதிற்கு திருப்தியாக இருந்தது. சுவாமிநாதனின் உத்தரவு வாங்கலாம் என்று சுமார் இரவு ஒன்பத மணியளவில் மூலவரை தரிசிக்கச் சென்றேன்.

"தந்தைக்கு ப்ரணவ மந்திரத்தை உபதேசித்து தகப்பன் சுவாமி என்று பெயர் பெற்ற குருவே!" எனக்கும் பதிவுக்கல் பதிக்க எதன் மூலமாவது உத்தரவு வழங்கு" என்று மானசீகமாக வேண்டி நின்றேன். அங்கு நாலைந்து குருக்கள்மார்கள் பொழுது போக பேசிக் கொண்டிருந்தார்கள். அவர்களில் மிகச் சிறுவயது குருக்கள் ஒருவர்,

திடீரென எழுந்து மூலவரின் மார்பில் சார்த்தியிருந்த சந்தனத்தை உருண்டையாக எடுத்து வந்து, என்கையில் தந்து சந்தோஷந்தானே என்றார். அவரிடம் ஏன் எனக்கு சந்தனம் தந்தீர்கள் என்றேன். அதற்கு அவர் எனக்குத் தோன்றியது தந்தேன் என்றார். இதன்பின் நான் வந்த விஷயத்தைக் கூறி சுவாமியின் உத்தரவு வேண்டி நிற்கின்றேன் என்று கூறினேன். அவரும் பதிவு செய்ய தேர்வு செய்த இடமே சரியான இடம் என்று உரைத்தார். அதையே அந்த சுவாமிநாதனின் உத்தரவாக எண்ணி அறைக்குத் திரும்பினேன்.

அன்றிரவு அறையில் அமர்ந்து, பதிவுக் கல் பதிக்க அனுமதி வேண்டி, குறிப்பு எழுதிக் கொண்டிருந்தேன். அந்த தங்கும் விடுதி வீடு போன்றது. நாலைந்த அறைகளைக் கொண்டது. வெளிச்சமிருந்தாலும் ஒருவித இருண்ட தன்மை சூழ்ந்திருந்தது. குனிந்து எழுதிக் கொண்டிருந்த எனக்குப் பக்கத்தில் வெகுநேரமாக ஒரு உருவம் நிற்பது வெள்ளையாகத் தெரிந்தது. நிமிர்ந்து பார்க்கவும் பயம், தைரியத்தை வரவழைத்துக் கொண்டு நான் நிமிர்ந்து பார்த்தேன். அங்கே, நிர்வாக அதிகாரி கை கட்டி நிற்கிறார். அவரிடம் என்ன ஐயா என்று கேட்டேன். அதற்கு அவர், எனது வீட்டிற்கு தாங்கள் அவசியம் வர வேண்டும். தங்களுக்கு உணவு தயாராக இருக்கிறது என்று அன்புக் கட்டளையிட்டார். அவர் வீட்டிற்குச் சென்று சிறிது உணவு அருந்தினேன்.

அந்த நிர்வாக அதிகாரிக்கு ஒரே ஒரு செல்வ மகள் மட்டுமே. அந்தப் பெண்ணுக்கும் இது பிரசவ நேரமாம் கருவில் குழந்தை குறுக்காக இருப்பதால் பிரசவம் கடுமையானதாக இருக்கும், ஆகவே அறுவை சிகிச்சை மூலமாக குழந்தையை வெளியே எடுக்க வேண்டி வரும் என்ற கவலையில் மனம் குழம்பியிருந்த வேலையிலேதான் நான் அவருக்கு காரியாலத்தில் வேலும், விபூதியும் வழங்கியிருக்கிறேன். அதே சமயம் அறுவைசிகிச்சை செய்ய வேண்டிய சிக்கலான பிரசவம், சுகப் பிரசவமாக இருந்திருக்கிறது. இதை அந்த நிர்வாக அதிகாரி

கூறி, மேலும் பலபல வசதிகளைச் செய்து பதிவுக் கல்லைத் திறக்க உதவி செய்தார்கள்.

இங்கே எனக்கு முன்னால் ஸ்ரீமத் பாம்பன் சுவாமிகள் சுவாமிமலை சென்று, ஒரு குழப்பத்தை உண்டு பண்ணி அனைவரும் உதவி புரியும் வண்ணம் சித்தாடல் புரிந்திருக்கிறார் என்பதை அருட்செல்வர்கள் சிந்தித்துப் புரிந்து கொள்வீர்கள்.

சுவாமிமலை நிர்வாக அதிகாரி மூலமாகவே பழமுதிர்ச் சோலையிலுள்ள நிர்வாக அதிகாரிக்கு கடிதம் வாங்கி பழமுதிர்ச் சோலையிலும் குமாரஸ்தவம் பதிவு செய்தேன்.

எண்ணூர் திருமுருகன் கோயில் திருப்பணி கும்பாபிஷேகம் பல அடியார்களுடன் கூடி சிறப்பாக நடந்தது. இதன் தொடர்பாக அருள்மொழி அரசு திருமுருக கிருபானந்த வாரியார் சுவாமிகளின் சிறப்பு சொற்பொழிவு நடக்க ஏற்பாடுகள் செய்திருந்தேன்.

எண்ணூர் செல்வதற்கு முன் சௌகார் பேட்டையில் என் இல்லத்தில் தங்கியருளினார்கள். எண்ணூர் சொற்பொழிவை முடித்துக் கொண்டு கார் மூலமாக திரும்பிக் கொண்டிருந்தோம். கடற்கரை வழியாக வந்து கொண்டிருக்கும் போது காரின் முன் பகுதியில் ஓட்டுனரும், பின்பகுதியில் வாரியார் சுவாமிகளும், நானும் அமர்ந்திருந்தோம்.

வாரியார் சுவாமிகள் எம்மிடம் ஒரு கேள்வியைக் கேட்டார்கள். இவ்வளவு பற்றோடு இக்குமாரஸ்தவ பதிவுக் கற்களை பதிப்பதன் மூ லமாக உங்களுடைய விருப்பம் என்ன? உங்களுடைய ஆசை என்ன? என்று அன்புடன் கேட்டார்கள்.

அதற்கு நான்,

ஐயா! நான் ஒரு கேள்வியை தங்களிடம் கேட்க விரும்புகின்றேன். தயை கூர்ந்து நீங்கள் அதற்கு பதில் சொல்ல வேண்டுமென்று

பிரார்த்திக்கவும் செய்கிறேன். அதாவது உங்களுடைய திருப்பணி இமயமலைக்குச் சமமானது. பாம்பன் சுவாமிகள் கருணையால் எம்முடைய திருப்பணிகள் சிறு கல்லைப் போல இருந்தும், தாங்களும் நானும் இக்காரிலே தனிமையிலே ஆனந்தமாக தெய்வீக விஷயங்களைப் பேசிக் கொண்டு செல்ல யார் காரணம்? என்று கேட்க, அதற்கு அவர்,

யாரப்பா காரணம்? என என்னையேத் திருப்பித் கேட்டார். அதற்கு பதிலாக நான்

என்னை வாழ வைக்கும் பாம்பன் சுவாமிகளின் பெருங் கருணைதான் இதற்கு மூல காரணம் எனச் சொன்னதும் பெரும் மகிழ்வு கொண்டார் அவர் கேட்ட –

குமாரஸ்தவம் பதிவுக் கல் திருத்தலங்களிலே பதிக்க ஆர்வம் கொண்டதும், பல லட்சம் பிரதிகளை பல மொழிகளிலே அச்சிட்டு வழங்குவதும் எந்த ஆசையுடன் செய்கிறாய் என்ற கேள்விக்குப் பதில் அளிக்கையில் –

– நீங்கள் கேட்டதும் தான் என்னுடைய ஆழ்மனதினுள் புதைந்திருக்கும் ஆசையை உணர்கிறேன். அது என்னவென்றால், சாதாரணமாக உயிர் பிரியும் தருவாயில் பஞ்ச இந்திரியங்களும் செயல்படுவது தெரியவராது என்று பெரியவர்கள் சொல்லுவார்கள். இந்தக் குமாரஸ்தவபிரதிகளை தாங்கள் (வாரியார் சுவாமிகள்) அஞ்சல்மூலமாகபலவெளிநாடுகெளுக்கு அனுப்பிவைக்கிறீர்கள்.இதை நானும்நேரில் பார்த்திருக்கிறேன். அப்படி ஒரு குமாரஸ்தவ பிரதி உலகின் இன்னொரு மூலையில் பகல் நேரத்தில் ஒரு அன்பர் பாராயணம் செய்து கொண்டிருக்கிறார். அதே சமயம் இந்திய நேரப்படி நள்ளிரவு இரண்டு மணி என்று வைத்துக் கொள்வோம் அந்த நேரத்திரே என் ஆவி பிரிகிறது என்னைச் சுற்றியுள்ளவர்கள் ஆழ்ந்த உறக்கத்தில் இருக்கிறார்கள். திருவருளாலும் குருவருளாலும் உலகின் இன்னொரு பக்கத்தில் அந்த அடியைார் குமாரஸ்தவ பாராயணம் செய்ய அந்த மந்திர அலைகள் சென்னையிலிருக்கும் என் ஆவி பிரியும் வேலையில்,

எனக்கு விமரிசையாக, அந்த தெய்வீக குமாரஸ்தவ மந்திர ஒலி, சக்தி வாய்ந்த சப்த அலைகள் என் காதுகளை வந்தடைய வேண்டும் என்பதே என் ஆசை. அதற்காகவே பிரதியிடுகின்றேன். அடுத்தடுத்த சந்ததிகளுக்கு பிரதி தர முடியாதே என்பதற்காக அசையாத கல்வெட்டாக குமாரஸ்தவம் பதிக்கிறேன். எனது கடைசி மூச்சு உள்ள வரை இந்தப் பணி தொடரும் என்று கூறினேன். கண்ணீர் வழிய வாரியார் சுவாமிகள் ஆசீர்வாதமளித்தார்கள்.

ஸ்ரீமத் பாம்பன் சுவாமிகளுக்கு பழனிக்க வரக்கூடாது என்பது இறைவன் கட்டளை. கடைசிவரை பழனி செல்வதற்கு அழைப்பு சுவாமிகளுக்கு வரவில்லை. இந்த திருத்தலத்திலேயே மலையுச்சியில் குமாரஸ்தவ பதிவுக்கல்லும் பாம்பன் சுவாமிகளது திருவுருவப் படமும் வைக்க வேண்டுமென எண்ணினேன்.

திருக்கல்லும் தயாராகியது. சென்னை நம்புல அய்யர் தெருவிலுள்ள நமது சுவாமிகள் வாழ்ந்த ஸ்ரீமத் பாம்பன் சுவாமிகள் ஆசிரமத்தில் திருக்கல்லை வைத்து அடியார்களை வழிபடச் செய்தேன். பிறகு எழும்பூர் இரயில் நிலையத்திலும், திண்டுக்கல், பழனி இரயில் நிலையங்களிலும் பூஜை செய்யப்பட்டது. இத்திருக்கல்லை ஒரே ஒரு சிறு வயது இளைஞனால் மட்டுமே சுமந்து வரப்பட்டது. மலை அடிவாரம் சாதுமடத்திலே திருக்கல்லை இறக்கிய பின் அந்த இளைஞரை அதற்குப் பிறகு காணவே முடியவில்லை. பழநிமலை அடிவார சாதுமடத்தில் அதிகாரியின் ஆவன செய்யாததால் மூன்று நாட்கள் திருக்கல் தங்கிவிட்டது. என்முறையீடுகளை எல்லாம் விநாயகப் பெருமானிடம் முறையிட்டேன்.

இந்த சமயத்தில் சாதுமடத்து சுவாமிகளை மடத்திலே யேப் பார்க்க முடிந்தது. அவர் எனது முகவாட்டத்தை அறிந்து நடந்ததைக் கேட்டார்கள். சொன்னதும், மடத்து வேலையாட்கள் மூலமாக சிமெண்ட், மணலுடன் திருக்கல் மறு ஐந்தாவது நிமிடத்தில் மலையேறியது. சென்னையில் நம்புல அய்யர் தெரு ஆசிரமத்தில் ஒரு பெரியார் கூறியது

போல மலையின் அடிவாரத்திலிருந்து ஒவ்வொரு படியாக சூடமேற்றி ஸ்ரீமத் பாம்பன் சுவாமிகளது திருவுருவப் படம் மேலே ஏறியது. பாம்பன் சுவாமிகளே மனமுவந்து வருவது போன்ற திருக்காட்சியாக திகழ்ந்தது.

பன்னிரண்டு அடியார்களுடன் இரவு சுமார் ஒருமணியளவில் திருக்கல் பதிவு நடைபெற்றது. இதைத் தொடர்ந்து ஒரு பெரிய மின்னலும், இடி முழக்கத்துடன் பெரிய மழையும் பெய்தது. மலையும், ஊரும் குளிர்ச்சி அடைந்தது. பாம்பன் சுவாமிகளது கருணையால் பதிவு சிறப்பாக அமைந்தது.

ஒரு மலையாள சுவாமிகளது உதவியால் ராமநாதபுரம் தங்கச்சி மடத்தில் குமாரஸ்தவ பதிவுக் கல் தயாராகியது அத் திருக்கல்லை ராமநாதபுர சேதுபதி சமஸ்தான இராணி திருமதி இந்திராதேவி பி.ஏ. அவர்கள் திறந்து வைத்து, உரையும் நிழ்த்தினார்கள். அந்த உரையில் தமக்கு மார்பிலே புற்றுநோய் இருந்ததாகவும் குமாரஸ்வ பாராயணத்தால் அந்நோய் நீங்கியதையும் கூறினார்கள். இவர் இந்த உரையினை நிகழ்த்தும் போது பழைய ஞாபகங்கள் நினைவுக்கு வந்தது.

ஒருசமயம், டாக்டர் எஸ். சரவணன் அவர்களுடன் மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்டிருந்த இராணி அவர்களை பார்த்து ஆறுதல் கூறி வேலுடன், பௌர்ணமி விபூதியையும் வழங்கி விட்டு வந்தேன். ஆனால் என்ன நோய் என்று நான் கேட்கவில்லை. குமாரஸ்தவ பாராயணம் செய்து வந்ததால் தமக்கு மருத்துவ பரிசோதனையில் புற்று நோய்க்கான அறிகுறியே இல்லை என்று கண்டதை அம்மை யார் அவர்கள் கூறியது கேட்டு நானும், அங்கு கூடிய அன்பர்களும் மகிழ்ச்சியுற்றோம். திருக்கல் பதிவு நல்லவிதமாக முடிந்தவுடன் இராணி அவர்கள் எங்களுக்காக சிறப்பு விருந்து அளித்ததுடன் எங்களுடன் கூடி உணவும் உட்கொண்டது சிறப்பிலும் சிறப்பானதாகும்.

இராணி திருமதி இந்திரா தேவி அம்மையாரின் பெரும் உதவியால் ராமநாத புர மாவட்டத்தைச் சார்ந்த திருத்தலங்களான உத்திர கோச மங்கை, சுவாமிநாதர் கோயில், வழிவிடு முருகன் கோயில், நாகநாதர் கோயில் ஆகிய திருத்தலங்களில் குமாரஸ்தவ பதிவுகள் இனிதே நடைபெற்றன.

ஒருநாள் மைலை மாமுனி குருஜி சுந்தர்ராமன் சுவாமிகளை மயிலாப்பூரிலுள்ள அவர்களது இல்லத்தில் சந்தித்தேன் என்னைப்பற்றியும், குமாரஸ்தவ திருப்பணி பற்றியும் அப்பெரியார் ஏற்கெனவே அறிந்திருந்தார்கள். அப் பெரியார் என்னிடம் பேசும் போது இத்தனைக் கற்கள் பதிவு செய்தது பெரிதல்ல சுப்ரமண்யா சேத்திரம் என்று கர்நாடகாவிலுள்ளது. அங்கேயும் பதிவுக் கல் பதிப்பிக்க வேண்டும் மென ஆசீர்வாதமளித்தார்கள். இதன்படியே தமிழ், கன்னட மொழிகளில் குமாரஸ்தவ பதிவு கற்கள் வடிவமைத்து பதிக்கச் சென்றேன். சிறப்பாக திறப்பு விழா நடைபெற்றது. அங்கிருந்த ஆலய நிர்வாகி உயர்திரு லக்ஷ்மணராவ் எனும் பெரியார் வேண்டுகோளுக்கிணங்க சுப்ரமண்யா சேத்திர மூலஸ்தான மூர்த்தியைப் போன்ற 500 கிலோ கிராம் எடையுள்ள கருங் கல்லாலான சுவாமியை, பதிமூன்று கிலோ மீட்டர் உயரத்தில் உள்ள குமார பர்வதத்தில் ஒரு நாளிரவு ப்ரதிஷ்டை செய்தேன். இன்றும் என்னை பத்து படிகள் ஏறக் கூடாது என்பது மருத்துவர்கள் கட்டளை என்றாலும் பதிமூன்று மூன்று கிலோ மீட்டர் உயரமுள்ள கரடுமுரடான பாதையைக் கொண்ட மலை ஏறிச் சென்று சுப்ரமண்யா சுவாமியை பிரதிஷ்டை செய்தது எப்படி என்பதைக் கண்டு வியப்படைகிறேன். எல்லாமே என்னை வழி நடத்தும் ஸ்ரீமத் பாம்பன் சுவாமிகளது அருட்கருணையே!

இந்த சமயத்தில் ஒரு அம்மையாரை நினைவு கூற கடமைப்பட்டுள்ளேன். அந்தத் தாயாரின் அருந்தொண்டினையும், அன்பையும், பாசத்தையும் சொன்னால் மிகையாகாது. அத் தாயின் பெயர் திருமதி சொர்ணாம்பாள் ஆகும். சைதாப் பேட்டையை

இருப்பிடமாகக் கொண்ட இத்தாய் என் விருப்பத்தின் பேரில் திருவான்மியூர் ஸ்ரீமத் பாம்பன் சுவாமிகளின் ஆலயத்தில ஒரு பெரிய கண்டாமணியும், மயூரநாதபெருமானின் நூறு கிலோ கிராம் எடையுள்ள பஞ்சலோக விக்ரகமும், குமாரஸ்தவ பதிவுக் கல்லும், கருங்கல்லிலான சுவாமி சிலையும் அப்புனிதவதியின் கருணையுடன் நடைபெற்ற திருப்பணியாகும். இன்றும் அந்தத் தாயின் சந்ததியினர்கள் தர்மகுணம் கொண்டு பௌர்ணமி திருநாளில் வரும் அடியார்களுக்கு பலவித பிரசாதங்கள் வழங்கி வழிபடுகின்றார்கள். சென்ற **11.9.1992** அன்று அத்தாய் இறைவனடி சேர்ந்தது வருட நினைவாகும்.

கழுகுமலையில் ஐந்து வருடமாக மழை இல்லாமல், குடிப்பதற்குக் கூட தண்ணீரில்லை. பதிவுக் கல் பதிக்க அங்கு சென்றிருந்த போது ஊரைச் சுற்றிப் பார்த்து வர கிளம்பிய என் துணைவியார் அங்கு பல வீடுகளில் குடிபப்தற்கு தண்ணீர் கேட்டு அவர்கள் கொடுக்காததால் மனம் வெதும்பி திரும்பி விட்டார். இது என்ன ஊர்? என்ன கோயில். இங்கு ஏன் குமாரஸ்தவம் பதிவுக் கல்லை பதிக்கிறீர்கள்? என்று புலம்பிய அவளைச் சமாதானப் படுத்தினேன். திருக்கல்லும் பதிவு செய்யப்பட்டது. வெயிலில் அசதியில் நானும் நண்பர்கள் உயர்திரு பி.ஆர். சந்திரபிரகாஷ், உயர்திரு செந்தாமரை கண்ணன் ஆகியோருடன் கண்ணயர்ந்தேன். மதியம் சுமார் இரண்டு மணி இருக்கும் போது பெருத்த இடியுடன் நீண்ட நேரம் மழை பெய்தது. அந்த ஊரும், மக்களும் மகிழ்ச்சியால் திளைத்தார்கள். சிங்கம்பட்டி ராஜா உயர்திரு முருகதாஸ் தீர்த்தபதி அவர்கள் திருக்கல்லைத் திறந்து வைத்தார்கள். அவ்வூர் மக்களும் கோலாகலமாக விழாவைச் சிறப்பித்தார்கள். விழா முடிந்து திரும்பும் போது அவ்வூர் மக்களனைவரும் ஆனந்த கண்ணீர் வழிய எங்களை வழி அனுப்பியதை இன்றும் என் கண்முன்னால் இருக்கிறது. அனைத்தும் பாம்பம் சுவாமிகளது குருவருளும், திருவருளும் கொண்டே நடைபெறுவதை கண்ணுற்றேன்.

திருப்போரூர், திருமுருகன் ஆலய நிர்வாகிக்கும், ஆலய மடாதிபதி அவர்களுக்கும் மனவேற்றுமை உண்டு. இதை திருக்கல் வடிவமைக்கும் சிற்பி, சிற்பச் செல்வர் வஜ்ரவேலு அவர்கள் மூலம் தெரிந்து கொண்டேன். இவ்வாலயத்தில் திருக்கல் பதிக்க வேண்டுமே என்று முதலில் இறைவனை தரிசித்து விட்டு அப்படியே மடாதிபதி அவர்களையும் தரிசிக்கச் சென்றேன். அப்பெருமான் என்னைக் கண்டதும், தான் இருமுறை சென்னைக்கு, பௌர்ணமி பூஜைகளில் கலந்து கொண்டதை நினைவு கூறி, குமாரஸ்தவ பதிவு திருப்பணிக்கு முழுவதும் ஒத்துழைத்து அவரே திருக்கல்லுக்கு சோட சோப உபசார பூஜைகள் செய்தது சிறப்பிலும் சிறப்பானதாகும். மேலும் அவர்கள் என்னை ஆசீர்வதித்து என் மார்பைத் தட்டி **பாம்பன் சுவாமிகளை இங்கு தரிசிக்கிறேன்** என கண்ணீர் மல்க கூறியது எனக்கு மேலும் உற்சாகத்தை அளிப்பதாக அமைந்தது.

சென்னை பைகிராப்ட்ஸ் சாலையில் புதுப்பாக்கம் வழியில் அமைந்துள்ளது சிவசுப்ரமணிய பக்த ஜன சபை ஆகும். இச் சபை ஸ்ரீமத் பாம்பன் சுவாமிகளால் நிறுவப்பட்டது. இங்கு குமாரஸ்தவ பதிவுக் கல்லைப் பதித்து விழா கொண்டாடினோம். இத்திருத்தலத்திலே பாம்பன் சுவாமிகளை நேரில் கண்ட பழகிய சிவப்பழமான மூதாட்டி திருமதி அம்மணி அம்மாள் பூஜைகளை நடத்தி வருகிறார்கள். ஸ்ரீமத் பாம்பன் சுவாமிகள் அவர் இயற்றிய பஞ்சாமிர்த வண்ணத்தை சுவாமிகளே பாடிக் கேட்டிருக்கும் இந்த மூதாட்டியார், இன்றும் அபிஷேகக்காலங்களின் போது மிக அழகாக பஞ்சாமிர்த வண்ணத்தைப் பாடுவார்கள். இத்திருத்தலத்திலே சுவாமிகள் இயற்றிய சண்முக கவசம் நூறாம் ஆண்டு விழாவின் போது பெரும் வாய்ப்பு எனக்குக் கிட்டியது. சுவாமிகளுக்குப் பிறகு வேறு யாரும் அபிஷேகம் செய்யாத **பஞ்சலோக முருகப் பெருமான் விக்ரகத்திற்கு என்னை அபிசேகம் செய்ய அந்த மூதாட்டியார் வேண்டுகோள் விடுத்தார்கள். நானும் அதன்படியே அபிஷேகம் செய்தேன். இந்நிகழ்ச்சி என் வாழ்வில் குறிப்பிடத்தக்க அம்சமாகும்.**

திருச்சியில் முதன்முதலாக துறையூர் கோலோச்சும் முருகர் ஆலயத்தில் திருமிகு ஜானகிராம் சுவாமிகளது தலைமையில் சென்னை உயர்திரு என் ராஜரத்தினம் பிள்ளை குடும்பத்தினர் மூலமாக திருச்சியில் புகழ் பெற்ற உயர்திரு Dr. ஜி. விசுவநாதம் பிள்ளை அவர்களின் மூத்த புதல்வர் அருட்பணி செல்வர். Dr.வி. ஜெயபால் அவர்கள் முன்னிலையில் நடை பெற்றது. திருச்சி விஜயத்திற்கு அஸ்திவாரமாக அமைந்த இந்த விழாவும் சிறப்பாகவே அமைந்தது. தரும சிந்தனையும், அன்புள்ளமும் கொண்ட கொடை முகில் உயர்திரு ஆர். விஷ்ணுதாஸ் அவர்களும் உயர்திரு வி. ஜெகதீசம் பிள்ளை அவர்கள் மூலமாகவும் திருச்சியில் ஸ்ரீசாரதாம்பாள் ஆலயத்தில் குமாரஸ்தவ பதிவுக் கல் சிறப்புடன் அமைந்தது. மேலும் இத்திருத்தலத்திலே பாம்பன் ஸ்ரீமத் குமரகுருதாச சுவாமிகள் அருள்நெறிச் சபை என்ற நெறிக் கழகத்தையும் நிறுவினேன்.

அதற்கு உயர்திரு ஆர்.விஷ்ணுதாஸ் அவர்களை தலைவராகவும், உபதலைவராக உயர்திரு வி.ஜெகதீசம்பிள்ளை அய்யா அவர்களும், பொருளாளராக சிரஞ்ஜீவி ஆர்.கலியமூர்த்தி அவர்களும், இளமைவேகம் கொண்ட அருட்தொண்டன் சிரஞ்சீவி எம். எஸ். சேர்வராயர் அவர்களை செயலாளராகவும் நியமித்தேன். சிறப்பாக நடத்தி வருகிறார்கள் என்பது மிக மகிழ்ச்சியாகவும் திருப்தியாகவும் உள்ளது. திருச்சியிலே திருச்சி சென்னை சாலையில் அமைந்துள்ள நெடுங்கூர் திருத்தலத்தில் பாம்பன் சுவாமிகளின் குக சாயுச்சிய நிலை திருவுருவத்தைப் போன்று திருமேனியுடைய தொண்ணூற்றெட்டு வயதுடைய பெரியவர் தவத்திரு லக்ஷ்மணன் சுவாமிகளைச் சந்திக்கும் வாய்ப்பு கிட்டியது. அவரது விருப்பப்படி ஸ்ரீமத் பாம்பன் சுவாமிகளது திருவுருவசிலையும், குமாரஸ்தவ திருக்கல்லும், திருக்கோயிலின் கும்பாபிஷேக வைபவமும் ஏற்பாடுகள் செய்து, ஸ்ரீமதி Dr. ஜி.சகுந்தலா அவர்களும் உயர்திரு Dr. வி. கனகராஜ் அவர்களும், ஸ்ரீமதி Dr. கே. சாந்தா அவர்களும் முன்னின்று விழாவைச் சிறப்பித்தார்கள்.

திருச்சி, வயலூர் திருத்தலத்தை உயர்திரு ஆர்.விஷ்ணு தாஸ் அவர்களுடன் தரிசிக்கச் சென்றேன். அத்திருத்தலத்திலே உள்ள உத்தமர் குகஸ்ரீசாமிநாத குருக்கள் (கண்ணன் குருக்கள்) பிரகாரம் சுற்றி வரும் போது என்னை சந்தித்தார். அவர் இங்கு மிகச் சிறிய குமார ஸ்தவ பதிவுக் கல் பதிக்கப்பட்டு ஒரு பார்வையில்லாத இடத்தில் இருக்கிறது. இத்திருக்கோயில் அருணகிரி நாதரும், திருமுருக கிருபானந்த வாரியார் சுவாமிகளும் போற்றும் திருத்தலம். இங்கு அழகாக, பெரியதாக ஒரு குமார ஸ்தவப் பதிவுக் கல் பதிக்க வேண்டும் எனது ஆசை!" என்று கூறினார். அப்பெரியாரின் வாக்கு முருகனின் கட்டளையாக எனக்குப் பட்டது. உயர் திரு விஷ்ணுதாஸ் அவர்களும் சென்னை, உயர்திரு என்.ராஜரத்தினம் பிள்ளை அவர்களும், அருள்நெறிச்சபை செயலானர் சிரஞ்சீவி எம்.எஸ். சேர்வராயர் அவர்களும் இங்கு பதிவுக் கல் பதிக்க ஆவன செய்கிறோம் என்று வயலூரான் அருகே வாக்களித்தார்கள்.

அதன்படியே திருக்கல்லுடன் சென்றோம். நானும் அருட்பணி குழுவினரும் குமாரவயலூர் ஆலய நிர்வாக அதிகாரி அவர்களிடம் இத்திறப்பு விழாவிற்கு அற நிலையத் துறை ஆணையர் ஸ்ரீ வி. இராமதாஸ் I.A.S. அவர்கள் தங்களுக்கு உத்தரவு அனுப்பி விடுவார். அவர்தான் தலைமை தாங்கி விழாவை சிறப்பிப்பார் என்று கூறினோம். அதற்கு அந்த நிர்வாக அதிகாரி இங்கு எந்த உத்தரவு வரவில்லை. யாரும் கல்லை இங்கு இறக்கக்கூடாது. ஆலயத்தினுள் கல்லை கொண்டு செல்லக் கூடாது என கோபமாக கூறிவிட்டார்.

அப்போது எங்களோடு வந்த கொத்தனார் நாங்கள் புறப்படுவதைப் பார்த்து, "சுவாமி! கோயிலுக்கு வந்து சுவாமி தரிசனமே பண்ணவில்லை. இங்கே இருங்கள். நான் சென்று தரிசனம் முடித்து வருகிறேன் என்றார். அப்போது தான் நான் செய்த பெரிய தவறு புரிந்தது. இதுவரை ஆலயத்திற்கு வெளியேயே இருந்து வாதிடுகிறோமே சுவாமியைப்







பார்க்கவில்லையே என்று உடனே ஆலயத்திற்குள் சென்று பொய்யா கணபதியை வணங்கி, பின் மூலவரை தரிசித்து வெளியே வந்தோம்.

வெளியே பரபரப்புடன் நிர்வாக அதிகாரி மற்றும் பலர் எங்களைத் தேடி அலைகிறார்கள். எங்களைப் பார்த்து அதிகாரி ஓடி வந்தார். கண்ணீர் மல்க மன்னிப்பு கேட்டு தவறுக்கு வருந்தினார். சென்னையிலிருந்து பலர் திருக்கல் பதிவு பற்றி நிர்வாக அதிகாரிக்கு தொலைபேசி மூலம் தெரிவித்து இருக்கிறார்கள். எப்போதும் இறைவனை வணங்கி வேலைகளை ஆரம்பிக்கும் எனக்கு இன்று பொய்யா கணபதியையும், முருகனையும், தரிசிக்காமல் நேராக அதிகாரியிடம் சென்றது மனதை பாதித்த சம்பவமாகும். இங்கு பதித்த திருக்கல் நகைகளில் வைக்கும் கற்களைக் கொண்டு அலங்காரம் செய்யப்பட்டது. திருப்பணிச் செல்வர் டாக்டர் எஸ். சரவணன் M.Sc., Phd. அவர்கள் அவர் துணைவியாருடன் வந்து திருக்கல்லை திறந்து விழாவினைச் சிறப்பித்தார்கள்.

இதைத் தொடர்ந்து உயர்திரு என்.ஆர். கிருஷ்ணன் அவர்களின் துணையுடன் திருவானைக்காவல் பாலதண்டாயுதபாணி சந்நிதியிலும், திருச்சி பெரியார் நகர் ராஜகணபதி ஆலயத்திலும் திருக்கல் பதிவு செய்யப்பட்டது இதேவேளை திருச்சி சாரதாம்பாள் திருக்கோயிலும், ராஜகணபதி ஆலயத்திலும் ஒவ்வொரு பௌர்ணமி யன்றும் குருவருளால் கூட்டு வழிபாடு பௌர்ணமி பூஜை நடைபெறுவதும் சிறப்பானதாகும்.

பாம்பன் சுவாமிகளுக்கு எப்படி மயூர வாகன சேவனம் கிடைத்ததோ அதுபோல, எனது அநுபவத்தில் நடந்த அற்புத நிகழ்ச்சி இது. முருகனது ஏழாவது படைவீடு என்று கூறுவார்களே கொங்கு நாட்டில் கோலோச்சும் திருத்தலம் மருதமலை. இங்கே திருக்கல் அருள்மிகு திருத்தணி அம்மாள் உபயத்தில் தயாரானது. விழாவிற்கு தலைமைதாங்க அருள்மொழி அரசு திருமுருக கிருபானந்தவாரியார் அவர்கள் கலந்து கொண்டார்கள். திருப்பணிசெல்வர் டாக்டர்





எஸ். சரவணன் அவர்கள் திருக்கல்லை திறப்பதற்காக இசைந்து வந்திருந்தார்.

திறப்புவிழாவிற்கு முதல்நாள் மாலை இடைவிடாத மழை, வேலைகள் ஏதோ காரணங்களால் தாமதமாகிக் கொண்டேயிருந்தது. திருக்கல் பதிக்கும் சுவர்ப்பகுதி கருங்கல்லால் ஆனது. சிற்பகச் செல்வர் சிற்பி வஜ்ரவேலு தனது திறமைகளைக் காட்டி கருங்கல் சுவரில் குமாரஸ்தவ பதிவுக்கல்லின் இருபகுதிகளையும் சரியான சேர்க்க முனைகிறார். ஆனால், முயற்சிகள் வீணாகின, குமாரஸ்தவ பதிவுகல்லில் வடிக்கப்பட்ட ஓம்கார வடிவம் சரியாகப் பொருந்தவில்லை. சுவரோடும் ஒட்டி நிற்கவில்லை. எல்லா அன்பர்களுக்கும் அயர்ச்சி, சோர்வு, பெரிய மலைப்பு! மாபெரும் நிபுணத்துவம் பெற்ற சிற்பி வஜ்ரவேலுவால் கூட ஏதும் செய்ய முடியாத தவிப்பு, தடுமாற்றம். விடிந்தால் திருமுருக கிருபானந்தவாரியார் தலைமையில் டாக்டர் எஸ். சரவணன் அவர்கள் திருக்கல்லை திறக்கவேண்டும். இந்த நேரத்தில் தான் பாம்பன் சுவாமிகள் தனது திருவிளையாடலை ஆரம்பித்தார். அந்த அந்திநேரவேளையில் யாருமே எதிர்பாராதவகையில் இருபெரும் வண்ணமயில்கள் படபடவென பறந்து வந்து குமாரஸ்தவ பாறைப் படிவங்களை தன் தோகைகளால் தடவின. பின், கல்லை மிக உன்னிப்பாக கண்காணித்துக் கொண்டிருந்தன. அந்த நேரத்தில், வேலை முடிந்துவிட்டதா என கவனிக்க, அங்கு வந்த நான் இந்த அற்புத காட்சியைப் பார்த்து மெய்சிலிர்த்து நின்றேன். உடனே நானும் டாக்டர் சரவணன் அவர்களும் சுற்றியிருந்த கோவில் நிர்வாகிகளை விசாரித்து மயில் அப்பம் சாப்பிடு மென அறிந்தோம். மூடியிருந்த பிரசாதக் கடையைத் திறக்கச் செய்து அப்பம் வாங்கினோம். அந்த வண்ணமயமான மயில்களுக்கு படைத்தோம். அந்த மயில்கள் அப்பத்தை ஏற்றுக்கொண்டு திருப்தியுடன் பறந்து சென்றன. வந்தவை மயில்களா அல்ல அல்ல என் இதய தெய்வம் பாம்பன் சுவாமிகள் அனுப்பிய தேவதூதர்கள்! திருக்கல்லைச் சேர்த்தோம். என்ன ஆச்சரியம் திருக்கல் அளவாக, திருப்தியாக இணைந்தன.

அனைவரின் சோர்வும், அயர்ச்சியும் மறைந்து உற்சாகமும் மகிழ்ச்சியும் நிறைந்தது. முதுபெரும் காங்கிரஸ் தலைவர் உயர்திரு சி.பி. நஞ்சப்பா அவர்களது குடும்பத்தினர்கள் 4 நாட்கள் ஈந்த விருந்தோம்பல், பக்தியும் மெய்சிலிர்க்க வைத்தன. அவர்களது தொண்டின் காரணமோ என்னவோ, திருக்கல் ஆலயத்தில் பதியவைப்பதற்கு முன் அவர்களது இல்லத்தில் ஒருநாள் தங்கியது. அடுத்த நாட்களில் விழா சிறப்பாக நிறைவேறியது.

ஸ்ரீமத் பாம்பன் சுவாமிகள் பிறந்து வளர்ந்த பாம்பன்பதியிலே குமாரஸ்தவ திருக்கல் வைக்க எண்ணினோம். அதன்படி, திறப்புவிழா ஏற்பாடுகள் நடைபெற்றன. வேலை முடிந்ததும் ஊரைச் சுற்றிப்பார்க்க நண்பர்கள் திரு செந்தாமரைக் கண்ணன், திரு சந்திரப் பிரகாஷ் மற்றும் சில அன்பர்களுடன் சென்றோம். திரும்பும் நேரத்தில் இரவு ஆகிவிட்டது. இடி முழக்கம், மழை, சூறைக்காற்று வேறு ஆரம்பமாகிவிட்டது. பாம்பன்பதி திரும்ப முடியாதபடி சூழ்நிலை அமைந்துவிட்டது. அடுத்த நாள் காலை ஒன்பது மணிக்குத் திறப்புவிழா. மேலும் பாலத்தைக் கடந்து செல்ல எவ்வித மார்க்கமுமில்லை. பாம்பன் ரயில்பாதையைத் தவிர வேறு வழிகள் தென்படவில்லை. ஆனால், இந்த மழையில், ஆளைத் தூக்கியெறியும் காற்றில் எப்படி பாலத்தைக கடப்பது?

ஸ்ரீமத் பாம்பன் சுவாமிகள் நினைந்து, அவர்மீது பாரத்தைப் போட்டு விட்டு ரயில்பாதை வழியாக நடக்க ஆரம்பித்தோம். பாலம் சமீபித்தது. ரயில்பாலம் கண்ணுக் கெட்டியவரை நீண்டு தெரிந்தது. நேரமோ இரவு மணி ஒன்பதுக்குமேலிருக்கும். ஒரு ஸ்லிப்பர் கட்டையிலிருந்து அடுத்த கட்டையில் கால் வைக்கும்போது கட்டைகளுக்கிடையில் கீழே, அதளபாதாளத்தில் சீறும் கடல் அலை, மோதிப் பாயும் தண்ணீர் பிரவாகம் சுவாமிகளை நினைத்துக் கொண்டு குமாரஸ்தவம், சொல்லியும் சண்முகக் கவசம் சொல்லியும் குமாரஸ்தவம் சண்முக கவசம் மாறி மாறிச் சொல்லும் வேளையில் இப்போது நினைத்தாலும் மேனி புல்லரிக்கிறது. எமக்கு முன்பாக





தலைக்கு மேலிருந்து வட்டமான ஸ்பாட்லைட் போன்ற ஒளிக்கற்றை எமக்கு வழிகாட்டுவது போல நாங்கள் நடக்க நடக்க எம் முன்னால் ஒளி வீசியது. நான்கு கிலோ மீட்டர் தூரமுள்ள பாதையை, பாலத்தை கடந்து விழாநடக்கும் இடத்திற்குச் சென்றோம். எல்லோருக்கும் ஆச்சரியம். உள்ளூர்வாசிகளுக்கு அதிர்ச்சி, வியப்பு! காலையில் விடிந்ததும் வந்து பாலத்தைச் சென்று பார்த்தோம். பார்க்கும் போதே நெஞ்சம் நடுங்கியது. பயத்தினால் வயிறு சுருண்டது! எப்படி? எப்படி?? என்று இதுவரை எண்ணி வியக்கின்றேன். இந்த அநுபவம் குமாரஸ்தவம், சண்முக கவசம் ஆகியவற்றுடன் பாம்பன் சுவாமிகளும் இணைந்து நடத்திய சித்தாடல் என்பதைக் கண்டேன்.

ஏதோ என் மனதில் தங்கிவிட்ட, மறக்கமுடியாத, மலரும் அநுபவங்களை இங்கே சொல்லியிருக்கிறேன். அநுபவங்கள் என்றால் எனது வாழ்வே அநுபவங்கள்தான் எனக்குக் கிடைத்த அனுபவங்கள், அற்புதங்கள் என் வழிப்போந்தும் செல்வங்களும் பெற்று, வளமான வாழ்வு வாழ தினமும் பாம்பன் சுவாமிகள் அருளிச் செய்த குமாரஸ்தவம், பகை கடிதல், சண்முக கவசம் ஆகியனவும் நேரமும், சூழ்நிலையும் அமைந்தால் சுவாமிகளது 6666 பாடல்களையும் பாராயணம் செய்யுங்கள் நல்லது நடக்கும். வணக்கம்.

வெற்றிவேல் முருகனுக்கு அரோகரா!
பாம்பன் ஸ்ரீமத் குமரகுருதாச சுவாமிகளுக்கு அரோகரா!

ஓம் குமரகுருதாஸ குருப்யே நம:
எனதினமும் குமாரபரமேஸ்வரனை
வேண்டிகும்பாபிஷேகம்
விரைவில் நடைபெற பிரார்த்திப்போம்

என்னை ஆதரித்த பரம ரகசியசக்தி
என்னை நம்பினாரை ஆதரியாது நிற்குமோ
ஐயம் வேண்டாம் (பாம்பன் சுவாமிகள்)

## "குமாரஸ்தவம் "

## பதிவுக் கல் ஒளிவீசும் அருள்தலங்கள்

1. அருணாசலேஸ்வரர் ஆலயம், சௌகார்பேட்டை (4.6.1972)
2. திருப்பரங்குன்றம்
3. திருச்செந்தூர்
4. பழநி
5. சுவாமி மலை
6. திருத்தணி
7. பழமுதிர்ச் சோலை
8. திருஆவினன்குடி (படம்)
9. பாம்பன் பதி
10. உத்தரகோச மங்கை
11. திருவேற்காடு சிவன் கோவில்
12. குமரக்கோட்டம், சென்னை
13. இரயில்வே மருத்துவமனை, பெரம்பூர்
14. பரசுராம லிங்கேசுவரர் ஆலயம், சென்னை
15. தியாகராஜஸ்வாமி திருக்கோயில், திருவெற்றியூர்
16. திருமுருகன் ஆலயம், எண்ணூர்
17. பெரும்பேடு முருகன் கோயில், பொன்னேரி
18. முருகன் கோயில், வடமதுரை
19. முருகன் கோயில், தேனாம்பேட்டை
20. குமரன் குன்றம், குரோம்பேட்டை
21. நெல்லையப்பர் ஆலயம், திருநெல்வேலி, 8.12.1980.
22. சுப்ரமண்யா க்ஷேத்திரம், கர்னாடகம் தமிழ் கன்னடம் மொழி.
23. சென்னப்பட்டணம் கோயில், 9.12.81
24. சூளை செக்கர்வேல் சுப்பிரமணியர் கோயில் 30.11.82
25. மருதமலை 27.12.82
26. அளர்மதீஸ்வரர் ஆலயம், அலமாதி, 19.10.80

27. சுவாமிநாத சுவாமி கோயில், 18.8.83
28. வழிவிடு முருகன் ஆலயம், 18.8.83
29. நாகநாதர் கோயில், 19.8.83
30. முருகன் ஆலயம், நீலகிரி
31. திருவான்மியூர் (படம்)
32. சிவஞானபுரம், கொசப்பேட்டை (குகன் கோயில், பெரம்பூர் டோல்கேட் (படம்)
33. பழநி ஆண்டவர் ஆலயம், ரெம்பூர்
34. முருகன் கோயில், குன்றத்தூர்
35. சிவா ஆலயம், திருவையாறு
36. சிவன் கோயில், வியாசர்பாடி
37. கங்காதீஸ்வரர் ஆலயம், சென்னை (புரசை)
38. திருமலை, செங்கோட்டை
39. சிதம்பரம (மடம்)
40. வைதீஸ்வரர் கோயில்
41. திருவண்ணாமலை
42. குமரகோட்டம் (காஞ்சி)
43. சூளை கந்தசாமி கோயில்
44. தங்கச்சி மடம் 22.5.88, குமாரஸ்தவம் காவடி வைபவம் 1.9.88
45. சென்னை பொது மருத்துவமனை 5.10.88
46. முருகன் கோயில், மில்லர்ஸ் ரோடு
47. பெரிய பாளைய அம்மன் ஆலயம், அடையார்
48. வினாயகர் ஆலயம், அடையார்
49. காளிகாம்பாள் ஆலயம், சென்னை
50. காஞ்சிபுரம்
51. முருகன் கோயில், திருப்போரூர்
52. பாம்பன் சுவாமிகள் ஆசிரமம், சென்னை (படம்)
53. வினாயகர் ஆலயம், அயன்பரம் ரயில்வே காலனி
54. வைத்தீஸ்வரரார் ஆலயம். செம்பியம் 19.02.89







55. கழுகுமலை, முருகன் கோயில் 3.09.89
56. திருவிடைக்கழி
57. வினாயகர் கோயில், வேளச்சேரி 23.10.90
58. துறையூர் ஆலயம், திருச்சி – 6.12.90
59. வினாயகர் ஆலயம், இராயப்பேட்டை
60. சிவசுப்ரமணிய பக்த ஜன சபா, பைகிராப்ட்ஸ் ரோடு
61. சாரதாம்பாள் ஆலயம், திருச்சி 24.2.91
62. நெடுங்கூர் ஆலயம், திருச்சி (விக்ரகம் ஸ்ரீமத் பாம்பன் சுவாமிகள்) 25.2.91
63. பாலமுருகன் ஆலயம், இரத்தினகிரி
64. சிவன் கோயில், திருஆலங்காடு, 21.4.91
65. வயலூர் முருகன் ஆலயம், 19.5.91
66. சிந்தாமணி வினாயகர் ஆலயம், பெரம்பூர், 29.10.91
67. பவானி எல்லையம்மன் கோவில், குயப்பேட்டை, சென்னை – 12
68. சிவன் கோயில், வேளச்சேரி.
69. இராஜகணபதி ஆலயம், திருச்சி – 4.6.92
70. திருவானைக்காவல், திருச்சி – 7.6.92
71. செங்கல்வராய சுவாமி கோவில் – கொண்டித்தோப்பு 14.6.92
72. பழநி ஆண்டவர் கோயில் – கொண்டித் தோப்பு (மடம்) 11.9.92
73. ஜெயவீர ஆஞ்சநேயர் ஆலயம், திருச்சி – 26.12.92
74. வேம்படி ஸ்ரீ சக்தி மாரியம்மன் ஆலயம், திருச்சி – 27.12.92
75. நவசக்தி வினாயகர் ஆலயம், திருச்சி – 28.12.92

28.12.1992 பின் கன்னியாகுமரியிலிருந்து, கேரளா, கர்நாடகா, ஆந்திரா, வடநாடு காசி (கேதாரிஸ்வரர் கோயில்) தமிழ், தெலுங்கு, மலையாளம், கன்னடம் ஹிந்தி ஆகிய மொழிகளில் இதுவரையில் 222 பதிவுகற்கள் பதிக்க பெற்றன.

இந்தப்பணி மேலும் தொடரும்
"வாழ்வோம் வளத்துடன்"





# போற்றிவிண்ணப்பம்

## ஆறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

ஐயனே யரசே போற்றி யருமறைப் பொருளே போற்றி
துய்யனே துணையே போற்றி தூமணித் திரளே போற்றி
மெய்யருள் விளைவே போற்றி வெற்றிவே லேந்து பூவற்
கையனே போற்றி யெங்கள் கடவுளே போற்றி போற்றி. 1

போற்றுவிண் ணவர்கோன் போற்றி புரிதவத் தொண்டர்க் கின்பம்
ஆற்றுநல் லழகன் போற்றி யாடுமம் பரியோன் போற்றி
நீற்றினைப் புனைந்த மேனி நிலவருட் குன்றம் போற்றி
சீற்றமெம் மேற்கொ ளாவோர் சிவசுப்பிர மணியம் போற்றி. 2

மணியணி மால்வி ரிஞ்சன் மற்றுள கணங்கள் யாவும்
பணியநின் றவனே போற்றி பரமனே போற்றி யன்பர்
அணியடி யலரே போற்றி யாக்கிநன் களித்து மாய்க்குங்
குணமுடை யத்தா போற்றி குமரவேள் போற்றி போற்றி. 3

போற்றிவந் தாளு முன்றன் பொன்னடிக் கமலம் போற்நி
தேற்றுவா ருன்னை யல்லாற் றிக்குவே றில்லை போற்றி
மாற்றரும் பிறவிக் காட்டை மடிக்கமெய்ஞ் ஞானத் தீயை
ஏற்றுமெஃ குடையாய் போற்றி யெங்குறை தவிர்ப்பாய் போற்றி. 4

பாய்நதிக் கிடையோன் வாம பாகமே கொண்டா டன்னைத்
தாயென வுவந்தாய் போற்றி தனிப்பரஞ் சுடரே போற்றி
வீயிலாப் புத்தேண் மாதை வேட்டுமற் றொருத்திக் கன்று
நாயக னானாய் போற்றி நான்மறை முதல்வா போற்றி. 5

முதலுமாய் நாப்ப ணாகி முடிவுமாய் நின்றாய் போற்றி
சததள பாதா போற்றி சகச்சிர நாமா போற்றி
மதிபுனை பரம னார்க்கு மதலையாய்க் குருவாய்த் தேவர்
பதியென வுவவேள் போற்றி பரஞ்சுடர்க் கண்ணா போற்றி. 6

கண்ணுமாய்க் கருத்து மாகிக் காணெழி லெந்தை போற்றி
விண்ணுமாய் மண்ணு மாகி விளங்கருட் டேவே போற்றி
பண்ணவர்க் கருளத் தண்ட பாணியா நின்றாய் போற்றி
தண்ணருட் கடலே போற்றி சதுர்முகற் கிறைவா போற்றி. 7

இறைவனே போற்றி யாதி யெந்தையே போற்றி வேலுக்
கிறைவனே போற்றி நீப விணரணி சிவனே போற்றி
மறைபுக லரிய வெங்கண் மாதவ மணியே போற்றி
குறைவறு நிறைவே போற்றி குளிர்சிவக் கொழுந்தே போற்றி 8

கொழுமையிற் குளிர்மை போற்றி குக்குடக் கொடியாய் போற்றி
குழுமிய சிவக ணங்கள் கும்பிடுங் கழலாய் போற்றி
தொழுபவர்க் கருள்வோய் போற்றி சுந்தரா போற்றி யென்னை
முழுதுமாள் பவனே போற்றி மோனநா யகனே போற்றி 9

நாயக மானார்க் கெல்லா நாயக மானாய் போற்றி
தாயென வருவாய் போற்றி சண்முகத் தரசே போற்றி
தீயரிப் பெயரோற் கன்று தெய்வமுங் குருவு மான
நீயெனைப் கலந்தாள் போற்றி நித்தனே போற்றி போற்றி. 10

---

★ திருவடிப் பேற்றை யிச்சிப்போரோ, தேடிய சொத்துக்களை ஆளுதற்குச் சந்ததியில்லையேற் சுவிகார புத்திரன் விரும்ப வேண்டாம். அவ்விருப்பத்தினால் நுமக்குப் பெரும் பிரயோசனமின்று. அவற்றைக் கூறிப்போந்த மயூர வாகன சேவன மொன்றற்கே உபயோக மாம்படி செய்து பெரும்பரியோசன மடையலாம். கன்மலைமிசைக் கட்டுங்கட்டிடம் எப்பெருவெள்ளத்தாலும் எப்பெரு மழையாலும் வீழ்ச்சியுறுமே? உய்த்துணர்மின்.

– ஸ்ரீமத் பாம்பன் சுவாமிகள் வெளியறிவுறூஉ

---

**நற்கா லந்தான் மெய்த்தே நினைநிலை**

பிறந்தும இறந்தும் உழலும் தெய்வங்களை நீத்து சச்சிதானந்தனாகிய பெருமானைச் சிந்திக்கும் நிலை கூடுதல் ஒருவரின் நற்காலமேயாகும்.

– ஞானவாக்கியம்

# திருப்பழநி

## பண் - நட்டராகம்

சிங்கா நன்குதவுந் திரு வாறெ ழுத்தாளா
கங்கா ளன்குருவே நினை யேக ருத்தில்வைத்தன்
மங்கா வாழ்வுடையா யெனை வாவென் றேயழையாய்
தெங்கார் தென்பழநித் திருக் கோவி லுள்ளாயே. 1

எல்லார் ருந்தொழுது நல மேற்க வென்றிலறம்
இல்லார் மாதுறவா யில காறெ ழுத்திறைவா
வல்லார் வானவனே யெனை வாவென் றேழையாய்
செல்வா தென்பழநித் திருக்கோவி லுள்ளாயே. 2

நாயே னுய்யவென்று நவில் வேன்வ ருகவென்று
நேயா நீவரலா நிஜ மாநம் பென்றுசொன்ன
வாயா வெம்பரனே யெனை வாவென் றேயழையாய்
சீயார் தென்பழநித் திருக் கோவி லுள்ளாயே. 3

என்னா வின்றுதியை யினி தேற்றெ னக்காக
நன்னா வையசைத்து நல மேயு ரைத்தெனையாள்
மன்னார் சின்மயனே யெனை வாவென் றேயழையாய்
தென்னார் தென்பழநித் திருக் கோவி லுள்ளாயே. 4

சூடே னின்னடியை யன்றித் துதித்து நானெதையும்
பாடே னெம்மானே பர மார்த்த சன்யாசீ
வாடா விண்மலரே யெனை வாவென் றேழையாய்
சேடார் தென்பழநித் திருக்கோவி லுள்ளாயே. 5

தந்தார் சித்தர்களுந் தனி ஞான விற்பனரும்
வந்தே தாள்பணிய நிற்கும் வரத மாமுனியே
மந்தா ரத்திருவே யெனை வாவென் றேயழையாய்
செந்தார்த் தென்பழநித் திருக் கோவி லுள்ளாயே. 6







மின்னார் கௌபீனந் தனை வீக்கி மஞ்சழகார்
சன்னா சக்குருப்போற் றனி யாக நிற்குமருள்
மன்னே மாமுனியே யெனை வாவென் றேயழையாய்
தென்னார் தென்பழநித் திருக் கோவி லுள்ளாயே. 7

நானா சாதிகுல முரு நாமம் பாராமல்
ஊனார் சீவனெலா மரு ளுயிரென் றேமதிக்கும்
வானோர் தேசிகனே யெனை வாவென் றேயழையாய்
தேனார் தென்பழநித் திருக் கோவி லுள்ளாயே. 8

சத்தா நீறணிந்து கையிற் றண்ட மொன்றுடைய
கத்தா வாயெவர்க்கும் பர கதிநல் கையபது
மத்தார் பூணழகா வெனை வாவென் றேயழையாய்
சித்தா தென்பழநித் திருக் கோவி லுள்ளாயே. 9

மண்ணார் சீவனெலா மினு மாண்டெ ழாதவகை
பண்ணா நிற்குமருட் பர மேயன் ணாமலையான்
அண்ணா வென்னுயிரே யெனை வாவென் றேயழையாய்
தெண்ணார் தென்பழநித் திருக் கோவி லுள்ளாயே. 10

★ அறம்புல புரிவோனே யாயினும் ஐய முடையோனாய்ப் பல தெய்வ வழிபாடு செய்வோன் அவ்வுலகையடையான்; பிறப்பிறப்பிலுமுலுவன். செக்கர்வே ளொருவனே என்கடவுளென இவ்வுலக வாவொழித்து வழிபடலிற் சிறந்தோ னெவனோ அத்தீவிரதான், இப்பிறவியிற்றானே வீடு பேறெய்தியுய்வான். இவ்வுண்மை என்னால் இலிகிதமுஞ் செய்யப்பட்டுள்ளது.

– **ஸ்ரீமத் பாம்பன் சுவாமிகள் வெளியறிவுறூஉ**

# திருநெல்வேலிக்கோவில்

பண் - நட்டராகம்

சீருடை யாரியனே யெனைச் சேர வணைப்பவனே
ஏருடை வானவர்க ணித மேத்தும் பராபரனே
ஆருடை வேலவனே நெல்லை யப்பர் விமானமுறை
நாருடை யோமயனே யென்ற னாட்டத்தைப் பூர்த்திசெய்யே. 1

கச்சணி மாமுகையாள் குறக் காரிகை காவலனே
சொச்சமெய் யோகருளந் தனிற் சொந்தப்பட் டுள்ளவனே
அச்சமில் சிற்பரனே நெல்லை யப்பர் விமானமுறை
எச்சமி லெம்பரனே யென தெண்ணத்தைப் பூர்த்திசெய்யே. 2

ஏத்தி யிறைஞ்சுபவர் மிகை யேக வருள்பவனே
கோத்திர மற்றவனே குணக் கூறினை கூறவொண்ணா
ஆத்தும நாயகனே நெல்லை யப்பர் விமானமுறை
ஊத்தையில் சேயவனே யென துள்ளத்தைப் பூர்த்திசெய்யே. 3

உம்பரைத் தொண்டு கொளுங் கனவுத்திப் பெருக்குடையாய்
எம்பெரு மானெனவே நித மேத்துநர் பங்குடையாய்
அம்பர வேதியனே நெல்லை யப்பர் விமானமுறை
செம்பர வேலுடையா யென்றன் சிந்தையைப் பூர்த்திசெய்யே. 4

கங்கையுங் கொன்றையு மார் கிடைக்கண்ணுத லானவொரு
சங்கர னார்குமரா வந்தச் சங்கர னாரிறைவா
அங்கத மற்றவனே நெல்லை யப்பர் விமானமுறை
புங்கவ னேகுகனே யென்றன் புந்தியைப் பூர்த்திசெய்யே. 5

கான மலர்க்குழலி தெய்வ குஞ்சரி காவலனே
தானவர் மாபுரியைச் சல ராசியான் மூடிவிண்ணோர்
ஆனவர்க் காக்கமிட்டோய் நெல்லை யப்பர் விமானமுறை
நூனமில் வேதியனே யென்ற னோர்க்கத்தைப் பூர்த்திசெய்யே. 6

பத்தருட் புத்தமுதே யெங்கள் பாக்கியப் பொக்கிஷமே
சித்தெனுஞ் சத்திதனை யொரு துண்டத்திற் சேர்த்துளனே
அத்தனே யற்புதனே நெல்லை யப்பர் விமானமுறை
நித்தனே சண்முகனே யென்ற னெஞ்சத்தைப் பூர்த்திசெய்யே. 7

பூவளங் கொண்டொழுகச் சிவ புண்ணியந் தான்றழைக்கத்
தாவற வேதினமு நல்ல தாம்பிர வன்னியெனும்
ஆவகை தான்பெருகு நெல்லை யப்பர் விமானமுறை
வீவி லயிற்கரனே யென்றன் வேண்டலைப் பூர்த்திசெய்யே. 8

சந்ததம் வந்திப்பவர் பத்திச் சாலத்திற் சிக்கிக்கொளுஞ்
செந்திரு வன்புடையா யுமை செல்வச் செழும்பொருளே
அந்தரர் நாயகனே நெல்லை யப்பர் விமானமுறை
நந்தலி லெம்பெருமா னென்றன் ஞானத்தைப் பூர்த்திசெய்யே. 9

சங்கையி லுன்புகழைத் தினஞ் சாற்றிய வெந்தைபிரான்
இங்கெனை யுய்வித்தவ ருனை யன்றி யெவருளரால்
அங்கியின் மேனியனே நெல்லை யப்பர் விமானமுறை
பங்கமி லாயெனது வழி பாட்டினைப் பூர்த்தி செய்யே. 10

மன்மத வருடம் ஆடி மாதம் 28ஆம் தேதி ஆதித்தவாரம்.

திருநெல்வேலிச் சிவாலயத்திலுள்ள சண்முகமூர்த்தி திருக்கோவில் பூதி மங்கியிருத்தலை தேசிகர் கண்ணுற்று உளம் வருந்துநராய் அற்றைப் போதாகிய ஆடி மாதம் 28ஆம் நாள் சீருடையாரியனே என்றற் றொடக்கத்து இவ்விருபதாந் திருப்பதிகம் பாடியருளினார். இதன்கண் முதற்கட் சீருடமை தோன்றி நிற்றலும், எனதுள்ளத்தைப் பூர்த்திசெய் என்னும் வேண்டுகோள் பெருகி நிற்றலும் காணக்கிடக்கின்றனவே. அக்கோவிலும் அடுத்த ஆண்டிற்றானே செழுமை பூத்து விளங்குதலைத் தேசிகர் கண்ணுற்று உவமை பூத்தாரென்னும் விவரம் சரித்திரத்துங் காணலாம்.

அச்சிட்டோர் : ஸ்ரீ சாய் பிரிண்டர்ஸ், சென்னை-15. போன் : 94449 29739, 98402 49491




ஸ்ரீமத் பாம்பன் சுவாமிகள் பிரப்பன் வலசையில் ஸ்ரீ முருகப் பெருமானிடன்
உபதேசம் பெறும் காட்சி 23.03.1894 வெள்ளிக்கிழமை



# சஸ்திர பந்தம்

## நேரிசை வெண்பா

வாலவே தாந்தபா வாசம்போ கத்தன்பா
மாலைபூ ணேமதிற மால்வலர்தே – சாலவ
மாபாசம் போக மதிதேசார் மாபூதம்
வாபாதந் தாவேல வா.






அச்சிட்டோர் : ஸ்ரீ சாய் பிரிண்டர்ஸ், சென்னை–15. போன் : 94449 29739, 98402 49491